# கல்கி

KALKI 4.6.89
ரூ. 2.

ஏஷியாட் தங்கம்
எட்டும் உயரத்தில்

இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில் இப்போது இந்தியாவில்

# International Lux



"உலகிலே பெரிதும் விரும்பப்படும் மேனியெழில் பராமரிப்பு சோப்புதான் எனக்கு ஏற்றது."



செழுமையான, செறிவான நுரைதரும் மேனியெழில் பராமரிப்பு; நீடித்த நறுமணம். இரண்டும் ஒருங்கே அமைந்த ஒரே சோப்: இன்டர்நேஷனல் லக்ஸ்.

உலகிலே 70 நாடுகளில் சினிமா நட்சத்திரங்கள் இதையே பெரிதும் விரும்புவதில் வியப்பென்ன!

இப்போது, இந்த சர்வ தேச விருப்பத்தை நீங்களும் முயன்று பார்க்கலாம். இதோ, இந்தியாவிலேயே.




HTA 2881

**உலகெங்கும் சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.**

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமிக்க தயாரிப்பு.



• துவண்ட உடல்; உறுதியான உள்ளம்.

• சக்கர நாற்காலியில் அமர்ந்தபடி இலவச டியூஷன்.

# இந்தியாவின் சிறந்த 10 இளைஞர்களுள் ஒருவர்

"டாக்டர்! என் கால்கள் எங்கே? என் கைகள் எங்கே?" என்று கேட்டான் ராமகிருஷ்ணன்! அவனுடைய கால் கைகளை மருத்துவர்கள் தூக்கிக் காட்டினார்கள்!

"டாக்டர்! என் கால் கைகளைப் பார்க்க முடிகிறது; ஆனால் அசைக்க முடியலையே! கழுத்துக்குக் கீழே எனக்கு எந்தவிதயான உணர்ச்சியும் இல்லையே! டாக்டர்! எனக்கு என்ன ஆச்சு?" என்று கேட்டுத் துடித்தான் ராமகிருஷ்ணன். அழுதான். கண்களில் நீர் பெருகியது. ஆனால் அதைத் துடைத்துக் கொள்ளக் கூட அவனால் கரத்தை அசைக்க முடியவில்லை!

ராமகிருஷ்ணனுக்கு நிஜமாகவே என்ன தான் ஆயிற்று? அதைத் தெரிந்து கொள்ளக் கொஞ்சம் பின்நோக்கிப் போக வேண்டும்.

நெல்லை — கட்டபொம்மன் மாவட்டத்தில் தென்காசியிலிருந்து சுமார் ஒன்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது ஆய்க்குடி. அந்தக் கிராமத்தில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தான் ராமகிருஷ்ணன். படிப்பிலும் விளையாட்டிலும் சிறந்து விளங்கி, வளர்ந்து, கோவை அரசினர் பொறி இயல் கல்லூரியில் சேர்ந்தான். நான்காம் ஆண்டு படிக்கும் போது இந்திய கடற்படைப் பிரிவுக்கு ஆட்கள் தேர்வு செய்யும் விளம்பரத்தைப் பார்த்தான். விண்ணப்பித்தான். நேர்முகத் தேர்வுக்குப் பெங்களூர் சென்றான்.

அங்கேதான் விதி விளையாடி விட்டது! கடற்படையில் சேர விரும்புகிறவர்களின் அறிவு மட்டுமின்றி, உடலுறுதியும், திட சித்தமும் சோதிக்கப்படுகிறது. அதன் ஒரு கட்டமாக, உயரமான ஓரிடத்திலிருந்து கீழே அமைக்கப்பட்டுள்ள ஒரு பரண் மீது குதிக்க வேண்டும். அப்படியொன்றும் அது அதிக உயரமல்ல. ஆனால் ராமகிருஷ்ணனின் போதாத வேளை, கால் இடறி, தலை



• ஆர். வி. யிடம் விருது பெறுகிறார் வனஜா.

# விருது பெற்ற வனஜா

**பா**ர்வையற்றவராக இருந்தபோதிலும் வனஜா காலையில் ஒரு கி. மீ. நடந்து, அமைந்த கரையில் பஸ் ஏறி, மவுண்ட் ரோடு அன்ன பூர்ணாவில் இறங்கி, ஆபீஸுக்குச் சென்று, ஸீட்டில் அமரும் வரையும் சரி, அதற்குப் பின்பும் சரி, சுயமாகவே இயங்குகிறார்.

சென்ட்ரல் பாங்க் பிராந்திய அலுவலகத்தில் டெலிஃபோன் ஆபரேட்டராக உத்தியோகம்.

வனஜாவின் திறமையான செயலாற்றலை அங்கீகரிக்கும் வகையில் மத்திய சமூக நல அமைச்சகம் இவரைக் கௌரவித்திருக்கிறது. உடல் ஊனமுற்றோரில், சிறந்த ஊழியருக்கான 1988 — ஆம் ஆண்டுக்கான விருதை அளித்திருக்கிறது.

வனஜாவின் கணவர் செல்வராஜ், பார்வையற்றோருக்கான தேசிய சங்கத்தின் சென்னைக் கிளையில் ப்ளேஸ்மென்ட் ஆபீஸராக வேலை செய்கிறார். வனஜாவைக் காதலித்துக் கைப்பிடித்தவர். இருவருக்கும் இருக்கும் பல ஒற்றுமைகளில் ஒன்று: செல்வராஜும் பார்வையற்றவர்.

காலையில், பாத்திரம் கழுவி, சமையல் செய்து, குளித்து, பிறகு தங்களுக்கு ஒளியாய்ப் பிறந்துள்ள குழந்தை சிவராமகிருஷ்ணனைக் குளிப்பாட்டி, டிரெஸ் செய்து, குழந்தைகள் இல்லத்துக்கு அனுப்பி விட்டு, அலுவலகத்துக்குச் செல்லும் வரை தம்பதி ஒருவருக்கொருவர் உதவிக்கொள்கிறார்களே தவிர, பிறர் உதவியை நாடுவதில்லை.

— ப்ரியன்

**சினிமாவில் சண்டைக் காட்சிகள்**

பற்றிய புதிர் ஒன்று இவ்விதழின் 59 — ஆம் பக்கத்தில் இடம் பெறுகிறது. உங்களுக்குப் பரிசு கிடைக்குமா? முயன்று பாருங்கள்!

குப்புற விழுந்து விட்டான். கழுத்தின் பின்புறம் பலமான அடி! 'களுக்' கென்ற மெல்லிய ஒலி, முதுகெலும்பில் முறிவு உண்டாகி விட்டதை உணர்த்தியது.

ராமகிருஷ்ணனுக்கு வலியில்லை, வேதனையில்லை, சுயநினைவும் இருந்தது! ஆனால் உடலை, கால் கைகளை அசைக்க முடியவில்லை! கீழே விழுந்து கிடந்தவனை, ஆஸ்பத்திரிக்கு உடனே அழைத்துப் போனார்கள்.

விமானப்படை ஆஸ்பத்திரி, ராணுவ ஆஸ்பத்திரி என்று பல மருத்துவமனைகளில் பலவிதமான சிகிச்சைகள் பல மாதங்களுக்கு நடந்தன. ஒரு சிகிச்சை அசுரத்தனமானதாகக் கூட இருந்தது! அந்த சிகிச்சையின் வேதனையை அனுபவித்த ராமகிருஷ்ணன், செத்தே போயிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்குமே என்று எண்ணினான். எந்த விதமான சிகிச்சையும் பலன் தரவில்லை. கழுத்துக்குக் கீழே எந்த வித உணர்ச்சியும் இன்றித் துவண்டு கிடந்தான் ராமகிருஷ்ணன்.

**ம**கன் கடற்படையில் சேர்ந்து நாட்டுப் பணியாற்றிப் பெரும் புகழும் பெறப் போகிறான் என்று எண்ணிய பெற்றோர்கள், இருபத்தோரு வயதான அவனுடைய இப்போதைய நிலை கண்டு மௌனமாகக் கண்ணீர் உகுத்தனர்.

ராணுவ டாக்டர்கள் கடைசியில் அலுத்துப் போய்த்தானோ என்னவோ, ராமகிருஷ்ணனை ஆம்புலன்ஸில் ஏற்றிச் சொந்த கிராமத்துக்கு அனுப்பி விட்டனர். ஆய்க்குடியில், 56, கீழத் தெருவில் ராமகிருஷ்ணன் இறக்கி விடப்பட்டான். ஊரே திரண்டு வந்தது. ஆள் கொட்டி, பரிதாபப்பட்டு விட்டுத் திரும்பியது. ராமகிருஷ்ணனின் தாய், வேதனையை ஒளித்துக் கொண்டு, அவனைக் கைக் குழந்தையாகப் பாவித்து, அன்னமூட்டினாள். மருந்து கொடுத்தாள். தூக்கிக் கொண்டு போய்க் குளிப்பாட்டித் திரும்பத் தூக்கிக் கொண்டு வந்து படுக்கையில் கிடத்தினாள். அருவருப்புப் பட்டுக் கொள்ளாமல் மலஜலங்களைச் சுத்தப் படுத்தினாள்.

இப்படியே ஐந்து நீண்ட ஆண்டுகள் சென்றன. ஊர் மக்களுக்கும் அவர்களைப் பார்க்க விடுமுறையில் வருகிறவர்களுக்கும் தான் ஒரு காட்சிப் பொருளாகி விட்டதைக் கண்டு மனம் நொந்து போனான் ராமகிருஷ்ணன்.

தனது குடும்பத்துக்கு ஒரு சுமையாகத் தான் இருக்கக் கூடாது என்றும் கருதினான்.

"அம்மா நான் ஒரு முடிவுக்கு வந்து விட்டேன்" என்றான், ஒரு நாள்.

பதறி விட்டாள் தாய்! "நீ என்னப்பா சொல்லுறே! நீ எனக்குச் சுமையே இல்லேப்பா!" என்று கதறினாள்.

"அம்மா! நான் சாகப் போறதில்லேம்மா! வாழப் போறேன்! அதாவது, இந்த அவல வாழ்க்கையிலும் ஓர் அர்த்தம் இருக்குமாறு

செய்யப் போறேன்'' என்றான் ராமகிருஷ்ணன்.

தாயார் அவனை வியப்புடன் பார்த்தாள். ஆசையோடு அவன் விருப்பத்தை நிறைவேற்றினாள். அந்தத் தெருவில் இருந்த ஐந்து ஏழைப் பிள்ளைகளை அழைத்து வந்தாள். அவர்களுக்கு டியூஷன் சொல்லித் தர ஆரம்பித்தான் ராமகிருஷ்ணன்.

அவன், பள்ளியிலும் கல்லூரியிலும் கற்றது எதையும் மறக்கவில்லை. பாடம் போதிப்பது அவனுக்கு ஆர்வமாகவும் ஆறுதலாகவும் இருந்தது. நேற்று வரை அவனை வேடிக்கை பார்க்க மட்டுமே வந்த குழந்தைகள், இப்போது பாடம் கேட்க வந்தனர். பரிதாபத்தை ஒதுக்கி, ராமகிருஷ்ணனை மரியாதையோடு பார்த்தனர். மதிப்பளித்துப் பழகினர்.

ஐந்து குழந்தைகளுடன் தொடங்கியது, சிவ சரஸ்வதி நர்ஸரி பள்ளி. இன்று நூறு குழந்தைகள் படிக்கின்றனர். ஓர் ஓலைக் கொட்டகையில் மூன்று வகுப்புக்கள் நடக்கின்றன. இலவச டியூஷன் தவிர, இலவச நோட்டுப் புத்தகம், இலவச பேனா — பென்சில், இலவச உடை, இலவச மருத்துவ உதவி என்று பள்ளியின் பணிகள் வளர்ந்து விட்டிருக்கின்றன.

இதோ ராமகிருஷ்ணன், வகுப்பின் ஒரு பக்கமாக, ஒரு கட்டிலில் படுத்திருந்தவாறே மாணவர்களுக்குப் பாடம் சொல்லித் தருகிறார்.

கழுத்துக்குக் கீழே உணர்ச்சியற்று உடல் தொய்ந்து போன நிலையிலும் ராமகிருஷ்ணனின் உடலில் உறுதியான ஓர் உள்ளம் இயங்கிக் கொண்டிருப்பதை நாம் உணர்கிறோம்! அதனால்தான் இந்தியாவிலேயே சிறந்த பத்து இளைஞர்களுள் ஒருவராக ராமகிருஷ்ணன் ஜேசீஸ் கழகத்தால் 1986ல் தேர்ந்தெடுக்கப்பட்டார். பத்திரிகையாளர் வந்திருக்கும் போது தாம் படுத்திருப்பது தவறு என்கிறார். சக்கர நாற்காலியில் அவரை நண்பர்கள் தூக்கி உட்கார வைக்கிறார்கள்.

தமது அமர்சேவா சங்கம், பள்ளிக்கூடம் நடத்துவது தவிர, அக்கம் பக்கத்துக் கிராமங்களில் வேறு பல சமுதாயப் பணிகளும் ஆற்றுவதை ராமகிருஷ்ணன் விவரிக்கிறார்.

ராணுவ இலாகாவிலிருந்து ஆண்டுக்கு ஆயிரம் ரூபாய் வீதம் ஐந்து ஆண்டுகளுக்கு வழங்கினார்கள். இப்போது அதுவும் நின்றுவிட்டது!

ஜேசீஸ் கழகம், அரிமா சங்கம், ரோட்டரி சங்கம் போன்றவை ராமகிருஷ்ணனின் பணிகளுக்கு ஓரளவு உதவுகின்றன. இரக்க குணம் கொண்ட தனி மனிதர்களும் உதவுகின்றனர்.

விரும்பினால் நீங்களும் உதவலாமே!

கட்டுரை, புகைப்படங்கள்:

**குளச்சல் இப்ராஹீம்**












* கசப்புணர்வு



* கலகலப்பு



* 'பிராம்ப்டர்'



* கே. எம். ஜான், இளையான்குடி.

? எம். ஜி. ஆர். உயிருடன் இருந்த போது அவரை நான் சரியாகப் புரிந்து கொள்ளாமல் இருந்து விட்டேன். அவர் உயிருடன் இருந்தால் இந்த நிலை எனக்கு இப்போது ஏற்பட்டிருக்காது என்று டி. ராஜேந்தர் வேதனையுடன் கூறியிருக்கிறாரே?

! சமயத்துக்குத் தகுந்தபடி சமரசம் பேசும் அரசியல்வாதிகளுள் ஒருவராக டி. ராஜேந்தரும் இருக்கிறார். நமது அரசியல்வாதிகள் நடிக்க ஆரம்பித்ததிலிருந்து நடிகர்கள் அரசியல்வாதிகளாவது எளிதாகி விட்டது.

* பி. வி. ஸ்ரீநிவாசன், பின்னத்தூர். *

? கோர்பச்சேவின் புதுப்புது வாபஸ் திட்டங்கள் பற்றி?

! சமாதானம் என்ற இலக்கு இவரது லட்சியமாக இருக்கிறது. இன்றைய பனிப் போர் சூழ்நிலையில் அணு ஆயுதங்களைச் செய்து குவிப்பதும் அவற்றை நேச நாடுகளில் கொண்டு போய் முன்னெச்சரிக்கையாக அடுக்கி வைப்பதும் பயத்தின் அடிப்படையில் எழுந்த கோழைத்தனமான செயல். ஏவுகணைகளை அவை நிறுவப்பட்டுள்ள இடங்களிலிருந்து வாபஸ் பெறுவதும் அணு ஆயுதங்களின் உற்பத்தியைக் குறைப்பதும்தான் அசாதாரண வீரத்தின் எடுத்துக்காட்டு. இந்த வீரதீரத்தைக் குறையின்றிப் பெற்றிருக்கிறார் கோர்பச்சேவ். இதன் எதிரொலியை அமெரிக்காவில் கேட்க முடியாவிட்டால் கூடப் பரவாயில்லை; கோர்பச்சேவின் இச்செயல்களை 'ஸ்டண்ட்' என்பது போல் ஏளனம் செய்வது வாஷிங்டனுக்கு அழகல்ல.

* கா. அப்துல் மஜீத், திருமயம்.

? கன்னியாகுமரி பகுதியில் இரத்த மழை பெய்ததாமே?

! ஸாரி. இதுபோன்ற விஷயங்களில் எனக்கு நம்பிக்கை இல்லை.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? ராபின் மெய்ன் வழக்கில் எம். ஜி. ஆர். போலீஸ் நிலையம் சென்றதைக் காளிமுத்து ஒப்புக் கொண்டிருக்கிறாரே?

! பாதுகாப்புக் கவசத்துக்கு ஏற்பாடு செய்து கொண்ட பிறகு அவர் என்ன வேணுமானாலும் பேசலாம். யார் தட்டிக் கேட்கப் போகிறார்கள்?

* க. இளங்கோ, நிம்மேலி.

? சினிமாத்துறை பாக்யராஜ், பத்திரிகை ஆசிரியர் பாக்யராஜ், அரசியல்வாதி பாக்யராஜ் — யார் திறமைசாலி?

! முதல் திறமையை முதலாக வைத்து மற்ற துறைகளில் காலூன்ற முனைகிறார். முதல் போகாமலிருந்தால் சரி.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? டீ. வி. நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்த ஒரு யோசனை சொல்லக் கூடாதா?

! ஓ. பேஷாகச் சொல்கிறேனே! பிரிட்டனைப் போல் டீ. வி. யை ஒரு தனி கார்ப்பரேஷனிடம் ஒப்படைக்கட்டும். அரசுத் துறையாக — ஓர் இலாகாவாக அது இயங்கக் கூடாது. போட்டிக்குத் தனியார் துறை டீ. வி. க்கும் அனுமதி வழங்கி, இவை அத்துமீறாமல் இருக்குமாறு கண்காணிக்க அறிஞர் பெருமக்கள் அடங்கிய ஒரு குழுவை அமைக்க வேண்டும். அப்போது பாருங்கள், தரம் எப்படி உயர்கிறது என்று!

* மு. மதிவாணன், அரூர்.

? தூக்கிலே தொங்க விடப்பட்டதைப் போல் கடைகளிலே தொங்கிக் கொண்டிருக்கும் பத்திரிகைகளுக்கு உயிர் இருந்தால் என்ன நினைக்கும்?

! இத்தனை அருவருப்பான செக்ஸ் கதைகளையும் ஆபாசமான ஜோக்குகளையும் வன்முறைச் சிந்தனைகளை வளர்க்கும் ரத்தக் காட்டேரி, டுமீல் — சதக் கதைகளையும்





* ஒப்பேற்றினார்!

* ஏமாற்றம்



தாங்கிக் கொண்டு உயிரோடு இருப்பதை விடத் தூக்கிலே தொங்கிச் சாவது மேல் என்றுதான்!

* ஆ. பன்னீர் செல்வம், மாதனூர்.

? சட்டசபைக்கூட்டங்களில் கவனத்துடன் கலந்து கொண்ட கலைஞர், பேராசிரியர், பி. எச். பாண்டியன் பற்றி?

! ரொம்ப நாளைக்கப்புறம் சட்டசபை அழுது வடியாமல் சுறுசுறுப்பு சபையாக இருந்தது. முதல்வர், அவைத் தலைவர் ஆகியோரின் பொறுப்புணர்வு போற்றுதற்குரியதாக இருந்தது. சபாநாயகர் நன்றாகவே சமாளித்தார். பிரதான எதிர்க்கட்சி, அதன் கடந்த கால ஆட்சித் தவறுகள் காரணமாகத் தாக்குவதற்குப் பதில் தற்காப்பு நிலைக்குத் தள்ளப்பட்டது வேடிக்கையாக இருந்தது. தீட்சிதர் அவையின் கலகலப்புக்கு அவ்வப்போது உதவினார் எனில், பி. எச். பாண்டியனோ கதாநாயகரான முதல்வருக்கு அவ்வப்போது பாயிண்டுகளை எடுத்துத் தரும் 'பிராம்ப்டர்' போல் செயலாற்றினார்.

மூப்பனாரின் மௌனம் ஏமாற்றம். குமரி ஒப்பேற்றினார். மார்ச் 25 திருஷ்டி பரிகாரம். ஜெ யின் புறக்கணிப்பு கசப்புணர்வு.

* வி. சுந்தரராமன், குத்தாலம்.

? சமீபத்தில் நெகிழ வைத்த சம்பவம்?

! உதகமண்டலத்தில் குதிரைப் பந்தயத்தில் ஒரு குதிரை ஜெயித்து விடாமல் இருக்க, அதற்குத் தண்ணீருடன் மயக்க மருந்துப் பொடி கலந்து கொடுக்கப்பட்டதுதான். சூதாட்டம் கொடியது எனில், அதில் மோசடி அதைவிடக் கொடியது. அதனினும் கொடியது, மனிதனின் பேராசைக்கு வாயில்லா ஜீவனை வதைப்பது.

* ஏ. ஜி. கல்யாணசுந்தரம், கோவை.

? உழைப்பு; அதிர்ஷ்டம் — இவற்றில் எதில் உங்களுக்கு நம்பிக்கை அதிகம்?

! சென்ற வாரக் கல்கியில் எண்பது வயதான எம். ஜே. கோபாலனைக் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு கௌரவிக்கப் போகிறது என்று படித்தபோது 'அட, இந்தியாவில் உழைப்புக்குக் கூட மதிப்பு இருக்கிறதே!' என்று நினைத்துப் பெருமிதமடைந்தேன். அவருக்குப் பணமுடிப்பும் வழங்கப்படவிருக்கிறது என்பதை அறிந்ததும் அவர் அதிர்ஷ்டத்தையும் எண்ணி மகிழ்ந்தேன். ஆனால் இன்று, 'பணமுடிப்பாவது, ஒன்றாவது அதெல்லாம் ஒன்றும் இடையாது' என்று போர்டு நிர்தாட்சண்யமாகத் தன் முடிவை மாற்றிக் கொண்டு, கைவிரித்து விட்டதைப் பார்க்கும் போது 'அதிர்ஷ்டம் என்ற சொல்லை அகராதியிலிருந்தே அழித்துவிட வேண்டும்' என்றுதான் ஆவேசம் வருகிறது!

# தமிழக சட்டசபைத்தொடர் எப்படி?



* வாபஸ் திட்டங்கள்.



* கதாநாயகர்



* சமயத்துக்குத் தக்கபடி...

# ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமிகள்!

"ஓட்டைக் கப்பலுக்கு ஒன்பது மாலுமிகள்" என்று ஒரு பழமொழி உண்டு. இதற்கு முற்றிலும் பொருத்தமுடையதாகக் காட்சி அளிக்கிறது தமிழக ஜனதா தளம். தில்லியில் தான் வி.பி. சிங்—சந்திரசேகர்; அஜீத்சிங்—தேவிலால் என்று பெரிய தலைகள் மோதிக் கொண்டு கெட்டுப் போகிறார்கள் என்று நினைத்தால், "இன்னமும் கெட்டுப் போகிறேன்; பந்தயம் போடு" என்ற கதையாகத் தமிழக ஜனதாதளம் கோஷ்டிப் பூசலில் கொடிகட்டிப் பறக்கிறது!

ஜனமோர்ச்சாவிலிருந்து வந்த ஜகவீர பாண்டியன் ஒரு பக்கம்; முன்னாள் மந்திரியும் இன்றைய ஜனதாதள எம். எல். ஏயுமான பூவராகன் ஒரு பக்கம். கலிவரதன் கோஷ்டி ஒரு திசை; செழியன் கோஷ்டி ஒரு திசை. நேற்று வரை தமிழக லோகதளத்தின் தலைவராக இருந்த டாக்டர் சந்தோஷம் ஐந்தாவதாக ஒரு திக்கு! கொசுறுக்கு 'ஒரிஜினல் ஜனதா நீடிக்கிறது' என்று கூறிக் கொண்டு அதன் தலைவராகப் பொன் விஜயராகவன்!

இதெல்லாம் போதாதென்று, "பீம்சிங். இது என்ன புதுக் குழப்பம்?" பாணியில் ஜனதா தள அவியலில் குதித்திருக்கிறார் டாக்டர் சுப்பிரமணியம் என்பவர். சேலத்தைச் சேர்ந்த இவர், லோக்தளம் — (பகுகுணா) பிரிவின் தமிழகத் தலைவராக இருந்தவர். இவர் ஹரியானாவுக்குப் போய் சிவாஜி கணேசனைக் கட்சியில் சேர்க்க அழைப்பு விடுக்கும் கடிதம் ஒன்றை தேவிலாலிடம் வாங்கிக் கொண்டு வந்து, சிவாஜியிடம் கொடுக்க, இப்போது ஏகக் குழப்பம்!



சிவாஜி தமது தமிழக முன்னேற்ற முன்னணியை "சட்டி சுட்டதடா கைவிட்டதடா" என்று விட்டுவிட்டு ஓடக் காத்துக் கொண்டிருக்கிறார். 'நம்முடைய நிலைக்குத் தி. மு. க. வில் சேருவதுதான் சரி' என்று அவரது சிஷ்யர்கள் ராஜசேகரன் போன்றோர் குரல் கொடுத்துக் கொண்டிருக்க, தளபதி சண்முகம், புரசைக் குமரன் போன்றவர்கள், 'ஜனதா தளத்தில் சேர்ந்தால் கௌரவமாக இருக்கும்; தி. மு. க. கூட்டணிக்கும் வசதியாக இருக்கும்' என்று சொல்கிறார்கள்.

"என்ன, சிவாஜி ஜனதா தளத் தமிழகத் தலைவராக வந்து விடுவார் போலிருக்கிறதே!" என்று கலிவரதன் கோஷ்டியைச் சேர்ந்த தொண்டர் ஒருவரைக் கேட்ட போது அவர், "இடித்தவன் புடைத்தவன் இங்கிருக்க, எட்டிப் பார்த்தவன் கொட்டிக் கொண்டு போன கதையாகத்தான் இருக்கும்! கஷ்டமோ... நஷ்டமோ... நாங்களெல்லாம் தொடர்ந்து இந்த இயக்கத்திலே இருக்கிற போது, இப்போது சேரப் போகிற ஒருவருக்குத் தலைவர் பதவியா?" என்று எகிறிப் பாய்ந்தார்.

தமிழக ஜனதா தள குழப்பத்துக்குத் தீர்வு காண, மாநில கமிட்டி, தேர்தல் பிரசாரக் கமிட்டி என்றெல்லாம் போட்டு, அவியலில் உள்ள எல்லாக் கோஷ்டியினருக்கும் இந்தக் குழுக்களில் தகுந்த இடம் அளிக்கப்பட்டது. ஆனால் சிலர் 'கோள்' மூட்டியதால், வைத்தால் குடுமி; சிரைத்தால் மொட்டை என்பது போல் கமிட்டிகளைக் கலைத்து விட்டார் வி. பி. சிங். இங்கிருக்கும் ஜனதா தளத் தலைவர்கள், தில்லியில் ஆளுக்கொரு தலைவரைப் பிடித்து வைத்துக் கொண்டு ஆட்டம் போடுகிறார்கள்.

தமிழ்நாட்டில் மட்டும்தான் ஜனதா தளத்துக்கு இந்த நிலையா என்ன? நாடு முழுவதும் இதே கதைதானே!"

— கௌசல்யா

* சிவாஜி ஜனதாதளத் தலைவர் ஆவாரா?



* பெய்ஜிங் நகரில் மாணவர் போராட்டம்.



* டெங் ஜியோ பிங்.

# சீனாவில் வீசும் ஜனநாயகப் புயல்!

ஒரு கறுப்பு நிறக் காலணி சீனாவிலுள்ள பெய்ஜிங் ஆசிரியர்கள் கல்லூரியில், ஒரு மரத்தில் ஆணியால் அறையப்பட்டிருந்தது. அதன் கீழ் ஒருவாசகம்:

'மாணவர்களை உதைப்பதற்கு ஒரு போலீஸ்காரர் இந்த ஷூவைப் பயன்படுத்தினார். அதனால் அவரிடமிருந்து அதைப் பறித்துவிட்டோம்'

— வாசகத்தை எழுதிய மாணவர் கூட்டம் அருகே நின்று கொண்டு சீன அதிபர் டெங் ஜியோபிங்குக்கு எதிராகக் கோஷம் எழுப்பிக் கொண்டிருந்தது.

கடந்த ஒரு மாதத்துக்கும் மேலாகச் சீனாவில் நடந்து கொண்டிருக்கும் மாணவர் கிளர்ச்சியின் ஒரு காட்சிதான் இது. டெங் ஜியோபிங் பதவி துறக்க வேண்டும். கம்யூனிஸ சர்வாதிகார ஆட்சிமுறை மாறி ஜனநாயக ஆட்சிமுறைக்கு வித்திட வேண்டும் என்பது மாணவர்களின் கோரிக்கை. ரஷ்யாவில் அறிமுகமாகியுள்ள பெரிஸ்த்ரோய்கா, கிளாஸ்நாஸ்த் போன்ற சீர்திருத்தங்கள் சீனாவிலும் வரவேண்டும்; கருத்து சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம் ஆகியவை வழங்கப்படவேண்டும் என்று மிகவும் தீவிரமாக — ஆனால் அமைதியான அஹிம்சை முறையில் — போராடி வருகின்றனர் மாணவர்கள்.

கடந்த சில ஆண்டுகளாகச் சீன வல்லரசு பொருளாதாரக் கொள்கைகளில் மிகவும் தாராள மனப்பான்மையைக் கையாண்டு வருகிறது. சோஷலிஸக் கோட்பாடுகளைத் தளர்த்தி, முதலாளித்துவத்தை ஊக்குவித்துள்ளது. அண்டை நாடுகளுடன் வியாபாரம் செய்வதை எளிதாக்கிப் பிற நாட்டவர் சீனாவில் முதலீடு செய்வதைக் கூட வரவேற்றுள்ளது. தொழில் துறைக் கட்டுப்பாடுகளை நீக்கி அதிகாரங்களைப் பரவலாக்கியுள்ளது. இதனால் சீன மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறது. ஒரே வருடத்தில் சீனர்களின் சராசரி ஆண்டு வருமானம் இரட்டிப்பாகியுள்ளது.

பொருளாதாரச் சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதன் மூலம் அரசியல் சீர்திருத்தங்களின்பால் மக்களின் கவனம் திரும்பாமல் தவிர்க்க முடியும் என்ற நம்பிக்கையுடன்தான் இந்தச் சீர்திருத்தங்களைக் கொண்டு வந்தது சீன அரசாங்கம். ஆனால், அந்த நம்பிக்கை பொய்யாகிப் போனது.

உணவுக்காகக் கியூவில் நின்றாலும் ரஷ்ய மக்களால் தங்கள் அரசாங்கத்தைத் தாங்களே தேர்ந்தெடுத்துக் கொள்ள முடிந்தது: ரஷ்ய செய்தித்தாள்கள் தங்கள் அரசாங்கத்தை விமர்சித்தன. இவையெல்லாம் கோர்பச்சேவின் புதிய பெரிஸ்த்ரோய்க்கா கொள்கையின் விளைவுதான் என்று உணர்ந்த சீன மக்கள் — குறிப்பாக இளை

ஞர்கள் பொருளாதாரச் சீர்திருத்தத்தினால் மட்டும் திருப்தியடைந்துவிடாமல் உரிமைப் போராட்டத்தில் இறங்கிவிட்டனர்.

"ரஷ்ய பாணியில் அரசியல் சீர்திருத்தங்களை முதலில் கொண்டு வந்து விட்டுப் பிறகு பொருளாதாரச் சீர்திருத்தங்களை அறிமுகப்படுத்துவது" என்பது சீனாவுக்கு ஒத்து வராது என்று சில சீன அரசியல் தலைவர்கள் கருதுகிறார்கள். 'ஜனநாயகப் பாரம்பரியமற்ற ஒரு நாட்டில், எழுதப் படிக்கத் தெரியாத 220 மில்லியன் மக்கள் இருக்கும் போது, மக்களாட்சியை அறிமுகப் படுத்தினால் அது எவ்வாறு சீராக அமையும்?' என்பது அவர்களுடைய வாதம்.

ஆனால், சீன மாணவக் கிளர்ச்சியாளர்களின் வருத்தமெல்லாம், டெங் ஜியோபிங், மக்களாட்சியை நோக்கி ஓர் அடிகூட எடுத்து வைக்க மறுக்கிறார் என்பதுதான். மாறாகச் சீனத் தலைவர்கள் 'புதிய சர்வாதிகாரக் கொள்கை' வகுக்கப்பட வேண்டும் என்று கூறி வருகிறார்கள்!

மாணவர்கள் ஆரம்பித்த போராட்டம், கோர்பச்சேவ் கடந்த மே மாத மத்தியில் சீனாவுக்குச் சென்றபோது, உச்ச கட்டத்தில் இருந்தது. மாணவக் கிளர்ச்சியாளர்கள் பெய்ஜிங் தெருக்களை அடைத்துக் கொண்டு அமைதியாகப் போராடினார்கள். அதிபர் கோர்பச்சேவின் சுற்றுப் பயணத் திட்டத்தில் இரண்டு நிகழ்ச்சிகள் ரத்து செய்யப்பட வேண்டியதாகிவிட்டது.

காந்திய வழியில் உண்ணாவிரதத்தை மேற்கொண்ட பல மாணவர்களின் நிலை கவலைக்கிடமானது. உண்ணாவிரதத்தைக் கைவிட்டால் மாணவர்களுடன் அரசாங்கம் பேச்சு வார்த்தை நடத்தும் என்றார் சீன கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுச் செயலாளர் ஜாவோ ஜியாங். எனவே உண்ணாவிரதம் கைவிடப்பட்டது.

ஆனால், பிரதமர் லீ பெங்கும் அதிபர் டெங்கும் வேறு பல தலைவர்களும் எந்த வித சமரசத்துக்கும் தயாராயில்லாததால் பெய்ஜிங்கில் ராணுவ ஆட்சியைப் பிரகடனம் செய்தனர். மீண்டும் உண்ணாவிரதம் மேற்கொண்டனர் மாணவர்கள்.

பெய்ஜிங்கைச் சூழ்ந்து கொண்ட ராணுவத் துருப்புகளிடம், 'மாணவர்களைத் தாக்க வேண்டாம்' என்று வேண்டிக் கொண்டார்கள் பொது மக்கள். ராணுவமும் தாக்குதல் நடத்தத் தயங்கியது. மாணவக் கிளர்ச்சியாளர்கள் ராணுவத்தின் வருகையைக் கண்டு பொங்கி எழாமல் அவர்களை நண்பர்களாகக் கருதி உணவளித்து உபசரித்தனர். தாங்கள் தாக்கப்பட்டாலும் வன்முறையில் ஈடுபடப் போவதில்லை என்று உறுதியளித்தனர்.

மாணவர்கள், அதிபர் டெங்கையும் பிரதமர் லீ பெங்கையும் பதவி நீக்கம் செய்து விட்டனர்! அந்த ஏற்றுத் தலைவர்கள் பதவி துறப்பார்களா? அல்லது தொடர்ந்து சர்வாதிகாரப் போக்கிலேயே நடந்து கொள்வார்களா?

ஆட்சித் தலைமையின் ஆணையை ஏற்று ராணுவம் மாணவர்கள் மீது தாக்குதல் நடத்துமா? அல்லது ஆணையை நிறைவேற்ற மறுக்குமா?

வரலாறு காணாத வகையில், ஒரு கம்யூனிஸ்ட் ஆட்சியில் எழுந்துள்ள புரட்சி அதுவும் அமைதிப் புரட்சி — எந்தத் திசையில் திரும்பும் என்று உலகமே உன்னிப்பாகக் கவனித்து வருகிறது.

தொகுப்பு: எஸ்ஸார்

ஊடலின் ஆரம்பம். தவிக்கும் நெஞ்சம். தொலைபேசி நிசப்தம். காதலை நாடும் மனம்.

இதோ, தூதுவரும் கடிதம். மனம் குளிர...




rtificially flavoured. Contains no fruit juice or fruit pulp.




ப. சிதம்பரம்

புகார் கொடுக்கறவங்க எல்லாரும் புகார் கொடுங்க!

ஃபெர்பாக்ஸ் பற்றிய புகார்

போஃபர்ஸ் பற்றிய புகார்

ஜெயலலிதா பற்றிய கணக்கு

போயஸ் கார்டனில் 4 நாள்
சட்ட சபையில் 2 நாள்
பெங்களூரில் 8 நாள்
அமெரிக்காவில் 10 நாள்
டெல்லியில் 3 நாள்
சென்னையில் 5 நாள்





கல்கி

1989 ஜூன் 4
மலர் 47 இதழ் 44
சுக்ல வைகாசி 22



## அறிஞர்கள் + அரசியல்வாதிகள் = அற்புதங்கள்!

சென்ற மாத மத்தியில் தமிழக திட்டக் குழுவின் பணியை ஆரம்பித்து வைத்துப் பேசிய முதல்வர், 'நெய்க்குத் தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா?' என்ற கேள்வியை எழுப்பியிருக்கிறார்! 'ஒவ்வொரு முறையும் பட்ஜெட் தயாரிக்கப்படும் போதெல்லாம் சமுதாய நலப் பணிகளுக்கு நிதி ஒதுக்குவதா, தொலைநோக்குத் திட்டங்களுக்கு ஒதுக்குவதா? எதற்கு எவ்வளவு? எது முக்கியம்? என்பது ஒரு பிரச்னையாகி, சர்ச்சையைக் கிளப்பி விடுகிறது' என்று தெரிவித்தார். இப்படி ஒரு விவாதத்தை, எழுப்பி விட்டுப் பதிலையும் முதல்வரே தெரிவித்தார்: 'இரண்டும் முக்கியம்தான்!'

நாம் மறுக்கவில்லை. இரண்டும் முக்கியம்தான் என்பதில் சந்தேகமேயில்லை. ஆனால் சமுதாய நலத் திட்டங்கள் என்பன என்ன என்று கணித்து, ஒரு வரம்பு கட்ட வேண்டும். ஒவ்வொரு கிராமத்துக்கும் குடிநீர் கிடைக்கச் செய்வது, மருத்துவ வசதி செய்து தருவது போன்ற சில சமுதாய நலத் திட்டங்கள் வரவேற்கப்பட வேண்டியவை. இவற்றுடன் இலவசக் கல்வி, மற்றும் சத்துணவுத் திட்டம் ஆகியவற்றையும் சேர்க்கலாம். நமது குழந்தைகள் வறுமை காரணமாகச் சத்துணவு பெற முடியாத போது அவர்களுடைய அறிவு வளர்ச்சியும் பாதிக்கப்படுகிறது. இதற்கு விஞ்ஞான ரீதியான ஆதாரங்கள் நமக்குக் கிடைக்கின்றன. இந்நாட்டின் எதிர்கால மன்னர்கள் — நாளை நாட்டை ஆளப் போகிறவர்கள் — தேசத்தின் வளத்தை உயர்த்த வேண்டியவர்கள் அறிவாளிகளாக விளங்க வேண்டும், பலசாலிகளாகத் திகழ வேண்டும் என்பதில் இரண்டாவது கருத்துக்கு இடமில்லை. ஆக, சத்துணவுத் திட்டம், எதிர்காலத் தமிழகத்தின் மேன்மைக்கு இன்று போடப்படும் அஸ்திவாரம் என்றே கருதி, அதனை அனுமதிக்கலாம். 'குழந்தைகளுக்கு முட்டை வழங்க வேண்டும்' என்ற முதல்வரின் யோசனையையும் ஏற்கலாம். இதனை ஒரு தொலைநோக்குத் திட்டமாகவே கருதலாம்.

ஆனால், இதர பல இலவசத் திட்டங்கள் ஏற்கத்தக்கன அல்ல. இலவச வேஷ்டி புடைவை, அரிசி, காலணி, சீருடை என்று வளர்த்துக் கொண்டே போவது, மக்களைக் கையேந்தி நிற்கச் செய்யும் காரியம். இது சோம்பல் மனப்பான்மையை வளர்க்கும். இதை விடப் பெரிய ஆபத்து, இன்னும் பல இலவசங்களை எதிர்பார்க்கும் உள்ளப் பாங்கினை இது வளர்க்கும். இன்று ஆரம்பிக்கப்படும் ஓர் இலவசத் திட்டத்தை நாளை நிறுத்தவே முடியாமல் போகும்.

எனவே, சமுதாய நலத் திட்டங்களுக்குச் செலவிடப்படும் தொகை, செல்வத்தை வளர்க்கப் போவதில்லை; செலவை மட்டுமே வளர்ப்பவை என்பதை நினைவில் கொண்டு, கஞ்சத்தனம் காட்டாவிட்டாலும் அதனைக் குறைந்தபட்சமாக்க வேண்டும். சமுதாய நலத் திட்டங்களுக்கு ஒதுக்கப்படும் நிதி, இடையில் உறிஞ்சப்படாமல் கடைசி வரை பாயுமாறு கண்காணிப்பதும் அவசியம்.

மற்றொரு வகையான செலவு, தொலைநோக்குத் திட்டங்களில் முதலீடு செய்யப்படுகிறவை. தொழிற்சாலைகளை நிறுவ உதவுதல், அதற்கு அடிப்படைத் தேவைகளான மின்வளம், போக்குவரத்து வசதி போன்றவற்றை மேம்படுத்துதல் ஆகியவை இதில் அடங்கும். இவைதாம் செல்வத்தைப் பெருக்குவதுடன், நிரந்தர வேலை வாய்ப்புக்களையும் பெருக்கி, தமிழகத்தை வளப்படுத்தி, தமிழர்களைத் தலைநிமிர்ந்து நிற்கச் செய்யக் கூடியன. இவற்றில் கவனம் செலுத்தும் போதும் ஒரு முக்கிய விஷயத்தை நினைவில் கொள்வது நலம். தமிழகத்தில் தண்ணீர்த் தட்டுப்பாடும் மின்சாரத் தட்டுப்பாடும் இருக்கும்போது, அதற்கேற்ற விதமாக ஓரிரு தொழில் துறைகளைத் தேர்ந்தெடுத்துத் திட்டமிடுதல் நலம். பரவலாகப் பல அம்சங்களில் முதலீட்டைப் பெருக்குவதைவிட, தமிழகச் சூழலுக்கு ஏற்றதான — வேலை வாய்ப்புக்களைப் பெருக்கக் கூடிய — ஓரிரு துறைகளை மட்டும் தேர்ந்தெடுத்து, அத்துறைகளில் தீவிர கவனம் செலுத்தித் தமிழகத்தை மேம்படுத்துவது நல்லது. உதாரணம்: எலெக்ட்ரானிக்ஸ்.

மால்டா என்று ஒரு தீவு. இதாலிக்குக் கீழே இருக்கிறது. சுதந்திரம் பெற்றதும் அந்நாடு, சுற்றுலாப் பயணிகளை ஈர்த்து, நொடித்துப் போன தன் பொருளாதாரத்தை நிமிரச் செய்யத் திட்டமிட்டது. இதற்கு இடையூறாக இருந்தது குடிநீர்த் தட்டுப்பாடு! கடல்நீரைக் குடிநீராக்கும் திட்டத்துக்குப் பயப்படாமல் பல கோடி செலவழித்தது, மால்டா. கூடவே சுற்றுலாப் பயணிகளை ஈர்ப்பதிலும் தீவிர கவனம் செலுத்தியது. இன்று குடிநீருக்கு ஆகும் செலவைவிடப் பல மடங்கு சுற்றுலாத் துறையில் சம்பாதித்துச் செல்வம் கொழிக்கும் நாடாகத் திகழ்கிறது!

அறிஞர்களும் அரசியல்வாதிகளும் ஒத்துழைத்தால் தமிழகத்தில் அற்புதங்கள் நிகழ்த்திக் காட்டலாம்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# டீ.வி. தடங்கலுக்கு அ.தி.மு.க. வெளிநடப்பு!

## குழாய் விளம்பரம்!

●● வாட்டர் டேங்க் மேல ஆன்டெனா பொருத்தியது தப்பாப் போச்சு.

ஏன்...? என்னாச்சு?

ஐந்து நிமிஷம் விளம்பரம் வந்த பிறகு தான் தண்ணியே வருது!

— மு. குமரன், நிலக்கோட்டை.

## கண்ணைக் கட்டி; வாயைக் கட்டி!

●● தனிக் கட்சி அமைத்திருக்கும் மனைவியையும், தாயாரையும் மௌனமாகவே சமாளிக்கும் சாமர்த்தியக்காரர் எனது நண்பர். ஒரு நாள் அவரது தாயாருக்கும், ஐந்து வயது மகளுக்கும் டீ.வி. மகாபாரதத்தைப் பற்றி நடந்த உரையாடல்.

''காந்தாரி ஏன் பாட்டி கண்ல துணியைக் கட்டியிருக்கா?''

''அவ புருஷனுக்குக் கண் தெரியலையேன்னு அவளும் தானே தன் கண்ணை மறைச்சுக்கிட்டா.''

''அவருக்குக் கண் தெரியலேன்னா இவங்க ஏன் மறைச்சுக்கணும்?''

''அவருக்கில்லாதது எனக்கெதுக்குன்னு தான். புருஷன் கஷ்டப்படறதை அவளால சகிச்சுக்க முடியலை.''

''அப்ப, நம்ம அப்பாவுக்குக் கண் தெரியலேன்னா அம்மாவும் மறச்சுப்பாளா?''

''ம்... நல்லா மறைச்சுப்பாளே...'' பாட்டியின் குரல் உயர்ந்தது. ''அதெல்லாம் டீ.வி.யில மட்டும்தாண்டி. இப்பல்லாம் கல்யாணம் ஆனவுடனே புருஷனோட வாயையும், கண்ணையும் முதல்ல மனைவியே கட்டிடுவா... உண்டா இல்லையான்னு உன் அப்பாகிட்டயே போய்க் கேளு!''

— டி. வி. ராஜன், நெய்வேலி – 3.



## தடங்கலும் வெளிநடப்பும்!

●● என் நண்பரின் டீ.வி. கடையில் அமர்ந்து ஒளியும் ஒலியும் பார்த்துக் கொண்டு இருந்தோம். நாடோடி படத்தில், எம்.ஜி.ஆர்., சரோஜாதேவி இருவரும் பாடிய, ''நாடு... அதை நாடு'' என்ற பாடல் ஒளிபரப்பானவுடன் தடங்கல் ஏற்பட்டு விட்டது! உடனே தி. மு. க. அனுதாபியான என் நண்பர் ''ஐயோ! சீக்கிரம் போடுங்கப்பா! அப்புறம், ''கலைஞர் கருணாநிதி சதி செய்து விட்டார்'' என்று சட்டமன்றத்தில் அ. தி. மு. க. வெளிநடப்பு செய்து ஆர்ப்பாட்டம் பண்ணப் போறாங்க'' என்று பதறுவது போல் நடித்துக் கூறவும் எங்களால் சிரிப்பை அடக்கவே முடியவில்லை!

— பெ. ஜெயப்பிரகாஷ், பொள்ளாச்சி.

## அவஸ்தையின் காரணம்!

●● என் நண்பரின் திருமணத்தை வீடியோ எடுத்திருந்தார்கள். அதைப் பார்ப்பதற்காக நான் சென்றிருந்தேன். அப்போது நண்பரின் குடும்ப டாக்டர் வந்தார். அவர் வந்தவுடனே என் நண்பரின் தந்தைக்கு ஏதோ தர்மசங்கடம் ஏற்பட்டது போல் இருந்தது. வீடியோ போடுவதைத் தாமதப்படுத்தும் வகையில் ஏதேதோ செய்ய ஆரம்பித்தார்.

குடும்ப டாக்டரோ, 'வீடியோவை நானும் பார்த்து விட்டே போகிறேன்' என்று சொல்லி உட்கார்ந்து கொண்டார்.

பாதி வீடியோவைப் பார்த்த பிறகுதான், என் நண்பருடைய தந்தையின் அவஸ்தைக்குக் காரணம் புரிந்தது. அவர் டாக்டரின் எச்சரிக்கைக்கு மாறாக ருசித்து, ருசித்து ஸ்வீட்டுகளை வெட்டிக் கொண்டிருந்ததையும் வீடியோவில் தெளிவாகப் படமாக்கி இருந்தார்கள்!

— சி. செ. நாதன், பம்பாய்.

## மாமாவின் பவர் போச்சு!

●● சமீபத்தில் என் தாய் மாமாவும் என்

அக்கா பெண் பத்மாவும் ஒரே சமயத்தில் எங்கள் வீட்டுக்கு வந்து இருந்தார்கள். எல்லோரும் டீ.வி.யில் இரவு பத்து மணிக்கு மேல் டெல்லி நிகழ்ச்சிகளைப் பார்த்துக் கொண்டிருந்த போது நிகழ்ச்சி சட்டென்று சரியாகத் தெரியாமல் 'கொர்ர்' சத்தமுடன் கோடுகள் தெரிந்தன. என் தம்பி ஓடி வந்து டீ.வி.யை 'ஆஃப்' செய்தான். 'ஏன்' என்று மாமா கேட்டதும், 'POWER FAILURE' நிகழ்ச்சி தெரிய கொஞ்ச நேரம் ஆகும்'' என்று சொன்னான். அவன் மனைவி அவனை அழைத்ததும் ''இதோ வரு கிறேன்'' என்று ஓடினான். ''பொண்டாட்டி கூப்பிட்டால் இப்படியா ஓடணும்?'' என்று மாமா கிண்டல் செய்ததும் அக்கா பெண் பத்மா, ''டீ.வி.க்கு மட்டுமில்லை; மாமா வுக்கும் கல்யாணம் ஆனதும், 'Power Failure' ஆகிவிட்டது'' என்றாளே பார்க்கலாம். எல்லோரும் கொல்லென்று சிரித்து விட்டோம்.

— ஆர். கண்ணன், மதுரை.

**டீ. வி. வீடியோ பக்கங்கள்:**



### கல்யாணம் முதல் தொட்டில் வரை...

●● எதிர் வீட்டுக்காரர்கள் இரண்டாவது மகளின் திருமணத்தை வெளியூரில் நடத்தி விட்டுத் திரும்பி வந்து ரிஸப்ஷன் கொடுத்தார்கள். விருந்துக்குப் பின் வீடியோவில் கல்யாண நிகழ்ச்சிகளைப் போடுவதாய் ஏற்பாடு. முதல் மகளின் கல்யாண வீடியோவையும் போட்டுக் காட்டும்படி கோரிக்கை எழ, அதை முதலில் போட்டார்கள். ஒரே கேஸட்டிலேயே கல்யாணம் முடிந்த பின் தொடரும்படியாக அப் பெண்ணின் வளை காப்பு வைபவம், பிறகு குழந்தைக்குப் பெயர் சூட்டி, தொட்டிலிடும் நிகழ்ச்சி முதலியவற்றையும் மிக அழகாகத் தொகுத் திருந்தார்கள். இரண்டாவது மகளின் கல்யாண வீடியோ தொடர்ந்தது. அது முடிந்ததும் வீட்டுக்குக் கிளம்ப நான் எழுந்தேன். என் ஐந்து வயது மகன் உடனே, ''அம்மா, இன்னும் கொஞ்சம் நாழி இரேன்; இந்தப் புது மாமிக்கும் வளையல் போடுவதையும், பாப்பாவுக்குப் பேர் வைத்துத் தொட்டில் போடுவதையும் பார்த்து விட்டே வீட்டுக்குப் போகலாம் என்றான். புதுப் பெண், மாப்பிள்ளை முகங்களைப் பார்க்க வேண்டுமே!

— எஸ். மல்லிகா, வசிராபாத்.

### டீ. வி.க்கு மலர் மாலை!

●● என் நண்பர் வீட்டிற்கு ஒரு நாள் போன போது அவர் டீ.வி.க்கு மாலை போட்டுக் கொண்டிருந்தார்! ''எதுக்குங்க?'' என்று விசாரித்தேன்.

''நன்றி உணர்ச்சியின் காரணமாகத் தான்!'' என்றார் அவர். டீ.வி. பார்க்கத் தினசரி என் வீட்டுக்கு வந்துக்கிட்டிருந்த எதிர் வீட்டு ரங்கசாமியின் மகன், வரதட்சணை இல்லாமல் என் மகளைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதிச்சுட்டான். கல்யாணம் அடுத்த மாதம். பத்திரிகை வரும். அவசியம் கல்யாணத்துக்கு வாருங்கள்'' என்று மிக்க மகிழ்ச்சியோடு சொன்னார்!

— பி.வி.எஸ். வாசன், சென்னை — 28.

### இது பாரத யுத்தம்!

●● டீ.வி.யில் மஹாபாரத நிகழ்ச்சி. ஊரிலிருந்து வந்த உறவினர் ஒருவருடன் கண்டுகளித்துக் கொண்டிருந்தேன். குழந்தைகளும் உடன் இருந்தனர்.

நிகழ்ச்சி முடிந்ததோ இல்லையோ, என் பிள்ளைகள் ஒருவருக்கொருவர் சண்டை யிட்டுக் கொள்ள ஆரம்பித்து விட்டனர். உறவினர், ''இதென்ன, அண்ணன், தம்பிக்குள் இப்படி சண்டை?'' எனச் சலித்துக் கொண்டார். அவருக்குச் சமாதானம் கூறுவது போல், ''டீ.வி.யில் மஹாபாரதம் நிகழ்ச்சி போட ஆரம்பித்ததிலிருந்து இப்படித்தான்!'' என்றாள் என் மனைவி. ''போன முறை நான் வந்த போது இப்படி யில்லையே; ஒற்றுமையாக இருந்தார்களே!'' என்றார் உறவினர். ''அப்போது டீ.வி.யில் இராமாயணம் அல்லவா, காட்டி வந்தார்கள்?'' என்று சொல்லிச் சமாளித்தேன்!

— எஸ். விஜயகுமார், தஞ்சாவூர் — 6.

# இன்னிசை பாடும் நேரம்









மியூசிகல் கடிகாரங்களிலே இந்தியாவில் முன்னோடிகள்

Ajanta®
QUARTZ

the touch of tomorrow's technology

மோர்வி 363 641

போன்: 3627, 2280, 2457, 2433

டெலெக்ஸ்: 0168-212 ATCM

VANITHA



M207



M267



M227



M257

எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கிறது

எச்சரிக்கை: எங்கள் தயாரிப்பு அனைத்திலும் 'அஜந்தா' மார்க் உள்ளதா என பார்க்கவும். போலிகளை கண்டு ஏமாறாதீர்.



# பாண்டி நாட்டுத் தங்கம்

காவல் துறையினர் கள்ளக் கடத்தலை மடக்குவதுதானே பழகு? ஒரு காட்டிலாகா அதிகாரி சந்தன மரம் வெட்டிப் போகும் திருட்டுக் கூட்டத் தலைவனை மடக்குகிறார் என்றால் — புச்சுதானே? அப்படியொரு அப்பாவித்தனமான அபிப்பிராயத்தில் எடுக்கப்பட்ட படம் இந்த 'த்' விட்டுப் போன தங்கம்!

கார்த்திக்கையும், நிரோஷாவையும் தவிர வேறு யார் வருகிறார்கள்? மன்னிக்கணும். கொஞ்சம் தடவிப் பார்த்துத்தான் சொல்ல வேண்டியிருக்கிறது. கசாமுசாவென்று மானாவாரி வெட்டு, குத்து!

பாவம், கார்த்திக்கை நினைத்தால் பாவமாய்த்தான் இருக்கிறது. ஃபைட்டிங் ஸ்டைல் இல்லையா, பார்வையில் காதல் கொப்புளிக்கவில்லையா, இளமையில்லையா, இசைவான தோற்றமில்லையா? எல்லாம்தான் இருக்கிறது. இசகு பிசகாய் எங்கேயோ போய்ச் சிக்கிக் கொள்கிறார்; எதுவுமே எடுபடாமல் போய்விடுகிறது!

தேவலை. அந்த வளையல்கார மாறுவேடம் — பிதாமகர்களை ஞாபகப்படுத்தினாலும் — ரசிக்கும்படியாய் இருக்கிறது. ஊர்ப் பொதுக் கூட்டத்தில் மூத்த வில்லன் செந்தாமரை அவரைக் கார்னர் பண்ணி அடுக்கடுக்காய்ப் பழி சுமத்திக் கொண்டு வரும் போது பதுங்கியிருந்து பிறகு பாய்கிறாரே ஒரு பாய்ச்சல் — வாய்ப் பாய்ச்சல், அது டக்கர்.

ஐயோ பாவமும் அடங்கி ஒடுங்கிய நாணமும் அதற்குள்ளே கொத்தி இழுக்கும் காதல் கொஞ்சலுமாய் நிரோஷா நெஞ்சுக்குள் ஒரு குறுகுறுப்பை ஏற்படுத்துவதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஊர்ப் பெருந்தனக்காரப் போர்வையில் வில்லன் பெண் கேட்டு வரிசைத் தட்டோடு வந்திருக்க, வளர்ப்புத் தந்தை வீராசாமி ஒப்புதல் தரவிருக்கும் கட்டத்தில் — ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்த நிரோஷா பாய்ந்து வந்து கண்ணீரும் கம்பலையுமாய், 'வேண்டாம்பா, எனக்கு இந்தக் கல்யாணத்தில் இஷ்டமில்லை...' என்று கதறுகிறாரே, அந்த ஒரு கட்டத்தில்தான் நிரோஷா சற்றே சலசலப்புக் காட்டுகிறார். மற்றபடி சாதுப் பசுதான். (பலாத்காரத் திமிறல் சேர்த்தியில்லை).

இந்தச் செந்தாமரையின் அலட்டல்களைச் சகித்துக் கொள்ளும் பொறுமை இனி ரசிகர்களுக்கு இருக்காது என்பதற்கு மேல் அவரைப் பற்றிக் குறிப்பிட ஏதுமில்லை.

இரண்டொரு காட்சிதான் என்றாலும் கெட்டிக்காரத்தனமாய் வித்தியாசமான பாத்திரத்தை ஏந்திக் கொண்டதால் நம்பியார் மனத்தில் நிற்கிறார். அதிலும் பஸ் ஏறு முன் மகன் கார்த்திக்கைத் தட்டிக் கொடுத்து, 'மை ஸன், நீ எல்லாத்தையும் சமாளிச்சிடுவேங்கிற நம்பிக்கை எனக்கிருக்கு. இருந்தாலும் பி கேர்ஃபுல்,' என்று எச்சரிக்கிறாரே, அதிலே மெய்யான தந்தைப் பாசம்.

கழைக் கூத்தாடி கும்பலுக்குள் நகைச்சுவைத் தளம் போட்டிருக்கிறார்கள். 'அமுக்கு, நாத்தும்,' என்று அடிக்கடி ஞாபகப்படுத்திக் குமட்டல் ஏற்படுத்தும் கைங்கரியத்தைச் செய்கிறார் சந்திரன் — எஸ். எஸ். அநியாயம் சார்! திரையுலகில் இரட்டைக் கிளவியில் மன்னன் இந்த ஆள். ஆரோக்கியமானதல்ல இந்த வல்காரிட்டி.

'ஹோ ஓ...! என்று சரளமாய் அடிக்கடி குரல் கொடுத்துப் பார்வையாளர்களை எதிரொலிக்கப் பண்ணியிருக்கும் கோவை சரளா கொஞ்சம் சிரிப்பு மூட்டுகிறார். தாலியேற்று வீடு வந்து சேர்ந்த பின்னும் டமுக்குச் சத்தம் கேட்டால்தான் இவரால் இயங்க முடியும் என்ற உத்தியை, பெற்றவர் வந்து சொல்ல, பாத்திரம் துலக்குவதிலிருந்து முதலிரவுப் படுக்கைக்கு வருவது வரை பறையடிக்கச் செய்தே குறை தீர்த்துக் கொள்வது கலகல.

யாரோ பெரிய சங்கீத வித்துவானின் மகள் என்று நிரோஷாவை அறிமுகப் படுத்தி, அப்புறம் சங்கீதத்துக்கும் அவருக்கும் சம்பந்தமில்லாமல் போனாலும் மொத்தத்தில் ராகதேவன் தன் வித்தையைக் காட்டிக் கைகொட்ட வைத்திருக்கிறார். போட்டிகள் பெருகட்டும்!

ஏதோ ஒன்றிரண்டு கனவுக் காட்சிகள் வர வேண்டியதுதான். அதற்காக ஜோடி சேரும் ஒவ்வொரு கட்டத்திலும் கற்பனை மிதப்புப் போட்டுக் காஸ்ட்யூம் வித்தை காட்ட வேண்டுமா? அலுப்புக்கு மேல் அலுப்பு!

எப்படியாகுமோ என்று தவிக்க விடாமல், இப்படித்தான் ஆகும் என்று தீர்மானிக்க வைத்து, அப்படியே ஆகிவிட்டால் படம்பார்க்கிறவர்கள் அலட்சியமாகச் 'சூள்' கொட்டிக் கொண்டுதான் திரும்புவார்கள்.

— பி. எஸ். எஸ்.

# வட்டமேஜை

* பெரும்பாலான பத்திரிகைகள் மறந்துவிட்ட நிலையில், கல்கியாவது கிருபானந்த வாரியாரை நினைவு படுத்தியதே; நன்றி! நன்றி!

சென்னை, ஆர். சந்திரன்.

* ஸ்கூட்டர் மொப்பெட் மோட்டார் சைக்கிள் ஓட்டுனர்கள் இவ்வாரக் கல்கியின் ஒன்பதாம் பக்கத்தைக் கிழித்து அப்படியே அட்டையில் ஒட்டி வைத்துக் கொள்ளலாமே!

சென்னை — 39, கவிதாசன்.

* கன்யாகுமாரி கலவர விவரங்களைப் பற்றிய கட்டுரைக்குப் 'போலீஸைக் காப்போம், துப்பாக்கிகளைக் காப்போம்' என்ற தலைப்பு வெகு பொருத்தம்!

சென்னை — 14, ஐயாறு எஸ். வாசுதேவன்.

* பொன்னியின் செல்வன் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டது என்று தோன்றினாலும் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலாமல் எழுதுகிறேன்:

ஆதித்த கரிகாலன் பாத்திரம் ஜீவனுள்ளது.

## ஆடவர் சுயநல மந்திரம்!

கொழுக்கட்டைக்குப் பூரணம் போன்றது. நந்தினி கரிகாலன் உரையாடல் காட்சி சிம்பிளி சுபர்ப்.

கம்பரசம்பேட்டை, என். பானு.

* வரதட்சிணை வாங்குவோரை இழிவு படுத்துகிறார் போன்ற சொல் 'கைக்கூலி' இனி கைக்கூலி என்பதே வழக்கத்திற்கு வர வேண்டும்! மாணவர்களின் அமைப்பு பாராட்டத்தக்கதாகும்.

திருத்துறைப்பூண்டி, ஜெயந்திப்ரியன்.

* டி.வி. விடியோ பக்கங்கள் பகுதியில், திரு. ஜி. மனையப்பன், தாங்கள் பார்த்தது டி.வி. ப்ரோகிராம் தான் என்று கடைசியில் தெரிந்தது என்று எழுதியுள்ளார். நேஷனல் ப்ரோகிராமில் எந்த மொழிப் படம் போட்டாலும் ஆங்கில மொழி பெயர்ப்பும் போடுவது அவருக்குத் தெரியாதா?

கோயமுத்தூர், ஏ. ஜி. கல்யாணசுந்தரம்.

* சமையலைக் குறை சொல்வதற்குச் சமையல் ஞானம் வேண்டும் என்கிற அவசியம் இல்லை ஐயா! நன்கு சாப்பிடத் தெரிந்தாலே போதும். நாக்கு நரம்புகளில் உணர்ச்சி, இருந்தாலே போதும். ஆனால் சமைக்கத் தெரிந்த கணவன் சித்திரக் கதை என்ன சொல்கிறது. சமைக்கத் தெரிந்தவன் குறை சொல்லுவானாம். தெரியாதவன் வாயை மூடிக் கொண்டு உண்பானாம்! பெண்களின் காதுகளில் பூச்சுற்றும் கர்ண கர்னாடக விளையாட்டுதான் இது! பெண்டிரை அடுக்களையிலே முடங்கச் செய்யும் ஆடவர் சுயநல மந்திரம். ஆணோ பெண்ணோ, சமைக்கத் தெரிந்தால் இருவருக்கும் நல்லது. கல்கி கூடவா இப்படி ஓரவஞ்சனை செய்யும்?

சென்னை — 18, கிங்வி.

* காஞ்சி பெரியவரின் எளிமை, எளிய வாழ்க்கையைப் பற்றி அழகாகக் குறிப்பிட்டுள்ளீர்கள். அந்த விவரங்கள் எல்லாம் எல்லோருக்கும் தெரிந்திருக்க நியாயமில்லை. 97 ஆம் ஆண்டில் அடி எடுத்து வைக்கும் பரமாச்சார்யாரின் ஆசீர்வாதத்தில் நாமும் இந்த உலகமும் செழிப்படைவோமாக.

திருச்சி — 2, கெ. ரமேஷ்.

* 21.5.89 இதழில் நடமாடும் தெய்வம் காஞ்சி மாமுனிவரைப் பற்றி அருமையான தலையங்கம் தீட்டியிருந்தீர்கள். அவரது திருஉருவப் படத்தை வண்ணத்தில் வெளியிட்டிருந்தால் மேலும் சிறப்பாக இருந்திருக்கும்.

சென்னை — 28, வி. கோபாலகிருஷ்ணன்.

* கலைஞருடைய தமிழைக் காதலிப்பதால் தி.மு.கவில் இருக்கின்றேன் என்றெல்லாம் பேசிய வசன வியாபாரிகளைப் போல் இல்லாமல், தி.மு.கவையும், கலைஞரையும் நான் வேறு படுத்திப் பார்க்கவில்லை என்று கருத்து தெரிவித்த ராதிகா பாராட்டுக்குரியவர். வெல்டன் ராதிகா!

வேலூர் — 13, கே.ஆர். தேவேந்திரன்.

* ராதிகா ஏதோ மிகப்பெரிய அரசியல்வாதி போலவும் அவரை ஓரங்கட்டி விட்டால் தி.மு.க வே திணறிவிடும் என்பது போலவும் பேட்டி எடுத்திருக்கிறீரே! பேட்டியில் நான் ரசித்தது ராதிகாவின் புகைப் படங்களை மட்டும்தான்!

நெல்லிக்குப்பம், ரா. ஜோதிராமன்.

* எடுத்தேன் கவிழ்த்தேன் என்றில்லாமல் ராதிகா தன்பேட்டியில் ஒவ்வொரு கேள்விக்கும் பட்டுக்கா மலும் தொட்டுக்காமலும் கட் அண்ட் ரைட்டாகப் பதில் அளித்திருந்த பாங்கு அவரின் பக்குவப்பட்டிருக்கும் தன்மையையே காட்டுகிறது!

இடையபாளையம் (அஞ்சல்) பெ. அருண்.

* ராதிகா பேட்டி படித்தேன். அரசியல் மௌடிகத்தில் ஆழ்ந்து திக்கித் திணறும் கல்கி வாசகர்களை மேலும் உயர்த்தி உய்விக்க நடிகைகள் மாயா, தீபா, சரஸ்வதி இப்படிப் பலரைப் பேட்டி கண்டு Front Cover — Back Cover Story என்று வெளியிட்டுச் சிறப்பித்து எங்கள் பொன்னான நேரத்தை மேலும் பயனுள்ளதாக்கத் தாங்கள் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும்.

சென்னை — 17, வி. பானு.

* 'என்னடாது அழகான மனைவி' என்ற கதைக்கு ஓவியர் மாருதி இப்படிப் படம் போட்டிருக்கிறாரே! என்று நினைத்தேன். அழகைப் பற்றி அழகாக உணர்த்திய ஓர் அழகான சிறுகதைக்கு ஓவியரும் அழகாகத்தான் படம் வரைந்திருக்கிறார் என்பது கதையைப் படித்த பிறகுதான் புரிந்தது!

மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.



# ஏஷியாட் தங்கம் எட்டும் உயரத்தில்

திருநெல்வேலி மாவட்டம் நாசரேத் பள்ளியில் இரண்டு மாணவிகள் உயரம் தாண்டும் போட்டியில் கலந்து கொண்டனர். அவர்களுள் சிலைன் பிரின்ஸ் என்பவள் தொடர்ந்து பல முறை முதல் பரிசைத் தட்டிக் கொண்டு போனாள். நாளாக ஆக, அவள் தோழி ஏன்ஜெலா அவளை இரண்டாம் இடத்துக்குத் தள்ளிவிட்டு முதலிடத்தைப் பிடித்துக்கொண்டாள் — பொறாமையினால் இல்லை! விடா முயற்சியினாலும் பயிற்சியினாலும்தான்.

படிப்படியாக முன்னேறி, பத்து வருடங்களாக மாறாமல் இருந்த உயரம் தாண்டுதல் தேசிய ரிகார்டை முறியடித்தார் ஏன்ஜெலா லின்சி. இந்த முயற்சிக்குத் துணை நின்றது தமிழ்நாடு மாநில விளையாட்டு வளர்ச்சிக் கழகத் தடகளப் பயிற்சியாளர் சாஜு அளித்த பயிற்சி. 1987 வரை, 1.65 மீட்டர் உயரம் தாண்டி, இந்தியாவில் பெண்களுக்கான முதலிடத்தை ஆக்கிரமித்து வந்தவர் உஷா ராணி மிஸ்ரா. தமிழ்நாட்டைச் சேர்ந்த விஜயலட்சுமி 1.67 தாண்ட, அவரையும் விஞ்சி 1.68 — ஐக் கடந்தார் ஏன்ஜெலா லின்சி. பிறகு வெகு விரைவில் 1.70, 1.72 என்று ஏணிப்படிகளில் ஏறுவது போல் சரசரவென்று கடந்து இப்போது பிரமிக்கத்தக்க 1.73—இல் வந்து நிற்கிறார்!

1.73 மீட்டர் என்பது கிட்டத்தட்ட ஐந்தே முக்கால் அடி — சராசரியாக ஓர் ஆள் உயரம்! இந்த உயரத்தை ஏன்ஜெலா கடக்கும்போது அருகிலிருந்து பார்த்தோம்: ஒரு சிறிய சூறாவளிப் புயல் மாதிரி ஓடி வந்து, 'ஜிவ்' வென்று எழும்பி, 'ஹைஜம்ப்' கட்டையைக் கடக்கும் அந்தச் சில வினாடிகளில் மட்டும் முகத்தில் முயற்சியின் தீவிரம் காட்டி, மறு பக்கத்தில் உள்ள மணல் பரப்பில் தென்றலாக விழுந்து, எழுந்து...

சொன்னபடி கேட்கும் திடமான கால்கள், ஒட்டி ஒடுங்கிய வயிறு, முழங்கால் வரை துவளும் வஜ்ரம் பாய்ந்த கைகள் என்று

* சொன்னதைக் கேட்கும் உடம்பு.

ஆரோக்கியத்தை உடல் முழுதும் பரவ விட்டு, புன்னகையை முகத்தில் தேக்கி நின்ற ஏன்ஜெலாவிடம் பேசினோம்:

''பள்ளி நாட்களின் மறக்க முடியாத சம்பவம் என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?''

ஏன்ஜெலா விவரித்தார்: ''நான் ஏழாம் வகுப்பு படிக்கும் போது, பள்ளிக்கூடத்தில் விளையாட்டுப் போட்டி நடைபெற்றது. அதிலே, நான் உயரம் தாண்டல், நீளம் தாண்டல், நூறு மீட்டர் ஓட்டம், இருநூறு மீட்டர் ஓட்டம் என நான்கிலும் பங்கேற்றேன். உயரம் தாண்டலில் முதல் பரிசும், மற்ற மூன்றிலும் இரண்டாம் பரிசுகளையும் பெற்றபோது, 'நானும் ஒரு திறமையான அத்லெட்டாய்ப் பிரகாசிக்க முடியும்' என்கிற நம்பிக்கை எனக்குள் ஏற்பட்டது.''

''உங்கள் பெற்றோர் ஊக்கமளித்தார்களா?''

''ஓ! நிறைய. இன்று என்னுடைய திறமைக்கும், நான் உயர்ந்துள்ள நிலைமைக்கும் அடிப்படையே என் அம்மாவும், அப்பாவும் எனக்குத் தாராளமாய் அளித்த ஊக்கமும் உற்சாகமும்தான் என்பேன்.''

இவரது அம்மா, அப்பா இரண்டு பேருமே பள்ளிக்கூட ஆசிரியர்கள். மகளைச் சிறந்ததொரு விளையாட்டு வீராங்கனையாய் உருவாக்குவது என்று முடிவு செய்து, அதற்கேற்பச் செயலில் இறங்கினார்கள். மகளை எல்லாப் போட்டிகளிலும் பங்கேற்கச் செய்தும் வெற்றி பெற்ற போது பாராட்டியும் அவர் முன்னேற்றத்துக்கு உதவினார்கள்.

ஏன்ஜெலாவின் அப்பா கால்பந்து ஆடுவாராம். ரிசர்வ் வங்கியில் பணிபுரியும் ஏன்ஜெலாவின் சித்தப்பா குணபாண்டியன், இந்தியக் கால்பந்தாட்ட டீமில் இடம் பெற்றவர். இப்படிக் குடும்பத்தில் ஸ்போர்ட்ஸ் பின்னணி அமைந்தது ஏன்ஜெலாவுக்குக் கூடுதல் வசதி.



* பயிற்சியாளர் பழனிநாதன்.

''1988 — ஆம் ஆண்டில் எனக்கு பங்கஜ் குப்தா நினைவுச் சுழல் கோப்பையைத் தமிழக விளையாட்டு விமர்சகர்கள் சங்கம் வழங்கியது. அப்பொழுது பரீட்சை இருந்த தால் நான் நேரிடையாகச் சென்று அந்தக் கோப்பையைப் பெறவில்லை. என் சார்பில் அப்பாதான் சென்று பெற்றுக் கொண்டார். அதே ஆண்டு கிடைத்த மாமல்லன் விருதை நானே நேரில் சென்று பெற்றுக் கொண் டேன்,'' என்று கூறிப் புன்முறுவல் பூத்தார் ஏன்ஜெலா.

''அடுத்து, பீஜிங்கில் நடக்கவிருக்கும் ஆசிய விளையாட்டுப் போட்டிகளில், இந்தியாவுக்கு நிச்சயம் ஒரு தங்கப் பதக்கம் பெற்றுத் தருவார், ஏன்ஜெலா'' என்று அடித்துச் சொல்லுகிறார் தற்போது அவரு டைய கோச்சாக உள்ள பழனிநாதன்.

விளையாட்டு 'கோட்'டாவில் ஏன்ஜெலா வுக்கு இந்தியன் வங்கி, வேலை கொடுத் திருக்கிறது. தற்போது, சென்னையில் அவ் வங்கியின் தலைமை அலுவலகத்தில் பணி புரிகிறார் ஏன்ஜெலா.

வங்கியின் தலைவர் கோபாலகிருஷ் ணன், ஆசிய விளையாட்டுக்களில், ஏன்ஜெலா தங்கப் பதக்கம் பெறத் தேவை யான அனைத்து உதவிகளையும் செய்யும் படி உத்தரவிட்டிருக்கிறார், என்பது மகிழ்ச் சிக்குரிய செய்தி. சுமார் ஐம்பதாயிரம் செல வில், உயரம் தாண்டுவதற்கு உபயோகிக் கப்படும் நுரை மெத்தைக்கு ஏற்பாடு செய் திருப்பதாகத் தெரிவித்தார் இந்தியன் பாங்க் ஸ்போர்ட்ஸ் செயலர் சுந்தர்.

தற்போது ஏன்ஜெலாவின் பிரத்தி யேக 'கோச்'சாக உள்ள பழனிநாதனும், இந்தியன் வங்கி ஊழியர்தான். தினமும் மாலையில் சுமார் மூன்று மணி நேரம் இவர் ஏன்ஜெலாவுக்குப் பயிற்சியளிக்கிறார்.

''ஹைஜம்ப் கட்டையைத் தாண்டியபின், மறுபக்கம் விழும்போது, உடலின் பாரம் தோள் பட்டையில் அமையும்படி தாண்டும் முறையில் (இந்த ஸ்டைல் அமெரிக்காவில் பிரபலமானது) ஏன்ஜெலா பயிற்சி பெற்று வருவதால், முந்தைய ஏஷியாட் ரிக்கார்டினை முறியடித்துப் புதுச் சாதனை புரிய முடி யும்'' என்று நம்பிக்கை தெரிவித்தார் பழனி நாதன்.

தமிழக விளையாட்டுத் துறை பொது மேலாளர் பூவெல்லா மோசஸ் ''ஏன்ஜெலா மிகவும் அடக்கமான குண முடையவர் — உடற்கட்டைக் கச்சிதமாக வைத்துள்ளார்'' என்று புகழுரை வழங்கு கிறார்.

165 செ. மீ. உயரமும், 45 கிலோ எடையும் உள்ள ஏன்ஜெலா வின்சி, தபாலில் பி. ஏ. பொருளாதாரம் படிக்கவிருக்கிறார். பொழுது போக்கு டீ. வி. பார்ப்பதுதான்.

— எஸ். சந்திரமௌலி.

வண்ணப்படம் மற்றும் படங்கள்:
கே. வி. ஆனந்த்



''அதோ போகிறானே, நம்பர் ஒன் கஞ்சன்!''

''அப்படி என்ன செய்தான்?''

''ஹனிமூனுக்குக் கூடத் தனியாகவே போய்விட்டு வந்தான்!''

— நாகை பாபு.



''சரித்திர நாவலாசிரியர் திடீர்னு ஏன் மயங்கிட்டார்!''

''தான் வர்ணித்திருந்த பெண்ணைப் பற்றிய வர்ணனையைப் படிச்சதும் அவரே மயங்கிட்டார்!''

— போடி ப்ரியபாரதி.



''பாஸ் பண்ணிட்டியான்னு கேட்டா, 'சயன்ஸிலே போச்சு'ன்னு சொல்றியே, ஏண்டா?''

''என்ன பண்றது, விஞ்ஞானிகளுக்கும் நம்ம நாட்டுக்கும் ராசியே இல்லேப்பா!''

— க. சேத்தாதம்பி.

# பொய் முடிச்சுகள்

தமயந்தி

விஸ்வநாதன் புறப்படுகிற வரையில் அவஸ்தைப்பட்டான். தேவையா என்று மனசுக்குள் நூறு முறை கேள்விகளைக் கேட்டுக் கொண்டான். கல்யாணம் அவசியமா எனக்கு? டில்லியில் கிடைக்கிற ஆயிரம் ரூபாய் சம்பளத்துக்குக் குடும்பம் நடத்த முடியாது. குழந்தை பிறந்தால் பராமரிக்க முடியாது. முடியாது என்று தெரிந்த பிறகும் எதற்காகக் காலை நுழைக்க வேண்டும்?

"இப்பவே முப்பது வயசாச்சு. இனி யாருடா உனக்குப் பொண்ணு கொடுப்பா? பயந்தால் ஆச்சா? கட்டுப்படியா, சிக்கனமா குடும்பம் நடத்தணும் விஸ்வம்!".

— அக்காவுக்கு மூக்குநுனி வரை ஆசை. யதார்த்தத்தைப் புரிந்து கொள்ளாத ஆசை. நந்தகுமார் வந்தால் விடமாட்டாள். "நீயாச்சும் சொல்லு நந்து. நீ கல்யாணம் பண்ணிக் கிட்டு இல்லையா? உனக்கும் இவன் வயசு தானே? சின்ன வயசிலிருந்து கைகோத்துட்டுச் சுத்துறீங்களே — சொல்லப்படாதா நந்து?"

நந்து வெறுமனே பார்த்துக் கொண்டு பேசாமலிருப்பான். விஸ்வநாதனுக்குச் சிரிப்பு வரும்.

"அவனுக்கென்னக்கா, கனையா மூவாயிரம் வாங்குறான். ஜம்முன்னு இருக்கான். செலவு கொறைச்சல். டில்லி மாதிரியா இந்த ஊரு..."

"அதெல்லாம் சரிதான்டா விஸ்வம். ஆனா, உனக்கு ஏத்த மாதிரி பொண்ணு பார்க்கிறோமே."

"ஏத்த மாதிரின்னா?"

"வேலை பார்க்கிற பொண்ணு; உன் பாரத்தைப் பகிர்ந்துக்கிற பொண்ணு."

"கிடைக்கும்ங்கிறியா?"

நந்தகுமார் முதன் முதலாகச் சிரித்தான். "கிடைக்காதுன்னு தீர்மானிச்சுட்டியா?"

"தெரியலை நந்து."

"சரின்னு சொல்லு. அலசலாம்."

"பார்ப்போம்."

மூன்றாவது நாளே புரோக்கர் மூலமாய் உஷாவின் ஜாதகம் வந்தது. ஐந்தாவது நாள் பெண் பார்க்கப் போனார்கள். விஸ்வநாதன் சங்கடப்பட்டான். கவலைப்பட்டான். 'அகலக் கால் வைக்கிறேனோ? இது தேவையில்லையோ எனக்கு?'

''நந்து... எனக்குக் கல்யாணம் அவசியம்ங்கிறியா?''

''நிச்சயமா...''

''மனைவின்னு வந்தால் செலவு ஜாஸ்தியாகும் நந்து. பூ வாங்கத் தோணும். புதுப் புடைவை வாங்கிக் கொடுக்க ஆசை வரும். புரியுதா நந்து?''

''இதைப் பாரு விஸ்வம். இந்தப் பொண்ணு கிராஜுவேட். கவலையில்லை. டில்லியில பி.காம்.க்கு சுலபியா வேலை கெடைச்சிடும்.''

''கிடைக்கும் நந்து. ஆனா... நான்...''

''பேசாம வா விஸ்வம்.'' நந்தகுமார் அதட்டினான். எரிச்சல் பட்ட மாதிரி தோன்றிற்று. ''அங்கே போய் அவகிட்டே தனியாப் பேசு. 'இது என் நிலைமை; பகிர்ந்துக்கச் சம்மதமா? நம் கல்யாண வாழ்க்கை சினிமால வர்ற மாதிரி டூயட்டும் சந்தோஷமுமா இருக்காது. முள் குத்தினால் தாங்கிப்பியா? முடியுமா'ன்னு கேளுடா. நீ கல்யாணம் பண்ணிக்கப் போகலே. பொண்ணு பார்க்கத்தான் போறே.''

''இல்ல நந்து. எந்தப் பொண்ணைப் பார்க்கிறேனோ அவளைத்தான் கல்யாணம் பண்ணிக்கிறதா இருக்கேன். வேண்டாம்னு சொன்னா அந்தப் பொண்ணு மனசு என்ன பாடுபடும்? வலியைப் புரிஞ்சிக்கிறதும்தானடா தாம்பத்தியம்!''

''இவ்வளோ தூரம் நினைச்சிட்டே. பிறகு என்ன பயம்?''

''தெரியலே நந்து. அவ ஒருவேளை கனவுகளோட இருக்கலாம். கல்யாணம் பண்ணிக் கொண்ட பிறகு 'இதென்ன லைஃப்'னு பட்டுனு அலுத்துடலாம். தப்பு பண்ணிட்டோமோன்னு தோணலாம்.''





## அருள்வாக்கு

"**ஸௌ**ந்தர்ய லஹரி சொல்கிறோம், அபிராமி அந்தாதி சொல்கிறோம்" என்று பல பெண்கள் என்னிடம் வந்து ஆசீர்வாதம் கேட்கிறார்கள். நல்ல காரியம்தான். ஆசீர்வாதம் பண்ணுகிறேன். ஆனால் இதையெல்லாம் விட அதிகமாக அம்பாளுடைய பிரீதியைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமானால் இவர்கள் வரதக்ஷிணை, வைரத்தோடு, சீர்செனத்தி என்ற கண்டிஷன் இல்லாமல் நான் சொன்ன மாதிரி கல்யாணங்களுக்கு மனப்பூர்வமாகச் சம்மதித்தால்தான் முடியும். தங்கள் மாதிரியான பெண்கள் வயது வந்தும் கல்யாணமாகாமல் நிற்பது, அதனால் மனோ விகாரப்படுவது, மானபங்கப்படுவது அப்புறம் மான உணர்ச்சியும் மரத்துப் போய் விடுவது என்றிப்படி ஆகியிருக்கிற நிலைமையை மாற்றுவதற்கு இவர்களுக்கு மனசு இரங்கினால் இவர்களிடம் அம்பாளுக்கும் மனசு தானாக இரங்கும்.

"நாங்கள் கேட்காமல் பெண் வீட்டுக்காரர்களாகவே இத்தனை கொடுக்கிறோம் என்று ஸ்வயேச்சையாக வந்ததால் வாங்கிக் கொண்டோம் என்று சொல்வது கூடத் தப்பு. ஏனென்றால் ஒருத்தர் பண்ணுவதிலிருந்து இன்னொருத்தர் என்று இது செயின் மாதிரி போய்க் கொண்டிருக்கிற வழக்கம். கட்டாயப்படுத்தாமலே ஒருத்தர் வரதட்சிணை கொடுத்தாலும் இதனால் அவர் தம் பிள்ளைக்கும் கல்யாணம் பண்ணும் போது வரதட்சிணை எதிர்பார்க்கத்தான் செய்வார். அதனால் அவர்களாகவே கொடுத்தாலும் கூட "வேண்டாம்" என்று சொல்லுகிற உயர்ந்த மனோபாவம் வர வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

"புலம்பாமல் வா விஸ்வம். பேசிப் பாரு. கலங்காதே."

முன்னால் சரிவாய் நின்ற இரண்டு தென்னை மரங்களின் நிழல் படர்ந்த அந்த வீட்டின் வாசற்படியில் விஸ்வநாதன் கால் வைத்த போதும் மனசில் கலக்கமோ பயமோ எதுவோ இருந்தது.

**அ**க்கா, விஸ்வநாதனைப் பற்றி உஷா அப்பாவிடம் பெருமைபட்டாள். எல்.கே.ஜி.யில் முதல் ராங்க் வாங்கி வந்ததை முகம் முழுக்கச் சந்தோஷம் நிரம்பச் சொன்னாள். வெயில், பாபநாசம் நீர் அளவு, திருநெல்வேலி அல்வாவின் தரம் என்று பேச்சு போயிற்று. விஸ்வநாதனுக்கு ஒட்டவில்லை. எங்கேயோ நீரில் விட்ட எண்ணெய் துளியாய்த் தவிப்பு.

"உஷா.... வாம்மா...."

மெல்லிசாய்க் கொலுசுச் சப்தம் கேட்டது. ஒல்லியாய் ஒரு கை காப்பியை நீட்டிற்று. காப்பி நுரை, தம்ளர் விளிம்பில் படர்ந்ததில் கை விரல் லேசாய் நடுங்கியது புரிந்தது.

நந்தகுமார் அவள் அப்பாவைத் தயக்கமாய்ப் பார்த்துச் சொன்னான். "விஸ்வம் பொண்ணுகிட்டே பேச விருப்பப்படுகிறான்."

அவர் இயல்பாய்ச் சிரித்தார். "அதுக்கென்ன" என்கிற மாதிரி பெரிதாய்த் தலையசைத்தார்.

"அந்த கீழ் ரூமுக்குக் கூட்டிட்டுப் போம்மா உஷா மாப்பிள்ளையை."

உரிமையை வலியக் கொண்டு வந்து, பவ்யமாய், விஸ்வநாதன் போக எழுந்து வழி விட்டார்.

மூன்று அறைகள் தாண்டி அழைத்துப் போனாள். அந்தப் பக்க வேப்பமர நிழல் அறையில் படர்ந்திருந்தது. நாற்காலியை இழுத்துப் போட்டு விட்டு ஓரமாய் நின்று கொண்டாள்.

"உட்காரேன்."

"பரவாயில்லே...."

"உங்கிட்ட பேசணும் உஷா...."

"........"

"இதுல உனக்குச் சம்மதமா?"

"ம...."

உதட்டு ஓரம் மெல்லிசாய் ஓர் இழை சிரிப்பு விரிந்தது. விஸ்வநாதனுக்குள் சிலிர்ப்பு தோன்றவில்லை. பயம் விருட்சமாய் விரிந்தது. இந்தச் சிரிப்பு கனவுகளின் எதிரொலியோ?

"டெல்லில இருக்கேன் உஷா. மாசம் ஆயிரம் ரூபா வருது. பிரும்மச்சாரியாய் இருந்தால் அது போதும். குடும்பம்னா கஷ்டப்படும். நீ வேலை பார்த்தால்தான் முடியும்."

"பார்க்கிறேன்."

"நீ பி.காம்.னு தரகர் சொன்னதா அக்கா சொன்னா. வேலை கெடைச்சிடும். என்ன க்ளாஸ் எடுத்தே?"

"செகண்ட் க்ளாஸ்."

"டோட்டல் எவ்ளோ உஷா?"

"அம்பத்திரெண்டு பர்ஸண்ட்."

"வருத்தமாயில்லையே உஷா? இதென்ன

ஒரு ரொமாண்டிக் அட்மாஸ்பியர்ல இவன் படிப்பு பத்திக் கேக்கறானேன்னு?''

''ம்ஹூம்...''

''போவமா?''

அவள் பதில் பேசாமல் வெளியே வந்தாள். முகத்தில் பழைய சிரிப்பு போய், ஒரு முதிர்ச்சி தெரிந்த மாதிரி தோன்றிற்று.

விஸ்வநாதன் மெல்லிசாய்ப் பெருமூச்சு விட்டான். கடவுளே! நன்றி! என் வாழ்க்கையிலிலும் திருமணம்.

''என்னடா பிடிச்சிருக்கா?''

''ம்....''

அடுத்த வாரம் நிச்சயதார்த்தம் குறிக்கப் பட்டது.

அடுத்த வாரம் உஷா வீட்டுக்குப் போன போது மனத்தில் சிலிர்ப்பு, சந்தோஷம், கிளுகிளுப்பு இருந்தது. வாசலில் இருந்த தென்னை மர நிழல் இன்னும் குளிர்ச்சியாய்க் காலில் பட்டது.

நிச்சயதார்த்தம் ஆரம்பிக்கும் முன் டிஃபன் பந்தி... விஸ்வநாதனை முதலில் உட்கார வைத்தார்கள். பக்கத்தில் பெரிய மீசையோடு ஓர் ஆள் உட்கார்ந்தார்.

''நான் உஷாவோட மாமா.''

''ம்....''

''உஷாவை நீங்க கல்யாணம் பண்ணிக்கறதுல பெரிய சந்தோஷம்.''

என்ன பேசவென்று தெரியவில்லை. விஸ்வநாதன் மௌனமாக இருந்தான்.

அவர் சாம்பாரிலிருந்து தக்காளியை எடுத்து ஓரமாய் வைத்தார். ''தக்காளி என்ன விலை விக்கிது இப்ப! டெல்லில விலை கொறச்சலா?'' என்றார்.

''இல்ல. உஷா வேலைக்குப் போனா சமாளிச்சறலாம்.''

''வேலைக்குப் போப் போறாளா?''

''ம்...''

''பி.காம். அவளுக்கு இன்னும் மூணு பேப்பர் இருக்கே?''

இட்லி தொண்டையில் சிக்கிற்று. பூவில் நடக்கும் போது கல் குத்தின அவஸ்தை. விஸ்வநாதன் சட்டென்று எழுந்தான்.

''என்னாச்சு விஸ்வம்? சாப்பிடுப்பா.''

அக்கா பதறினாள். அத்தானும் நந்தகுமாரும் முகத்தில் கேள்வி தேக்கிப் பார்த்தார்கள். விஸ்வநாதன் உள்ளே போனான்.

''உஷா... கொஞ்சம் வா.''

''என்ன? சாம்பார் எடுத்து வரவா?''

''உங்க மாமா நீ இன்னும் மூணு பேப்பர் வச்சிருக்கேனு சொல்றார். நிஜமா?''

''......''

''எச்சி விழுங்காதே உஷா. தயங்காதே. நிஜத்தைச் சொல்லு.''

கண் சிவப்பாகி அழுகை வர எத்தனிக்க உஷா பதறினாள்.

''ம்... ஆனா....''

''ஏன் பொய் சொன்னே?''

''வீட்ல... வீட்ல... சொல்லச் சொன்

கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ் வாங்கி

# ருசித்துப் பாருங்கள்



## இனிப்புகள்

1. குங்குமப்பூ பாதாம் கத்லி
2. குங்குமப்பூ பாதாம் ஹல்வா
3. பாம்பே டூர்
4. முந்திரி ஹல்வா
5. முந்திரி கத்லி
6. தேங்காய் பர்பி
7. தேங்காய் போளி
8. சந்திரகலா
9. புரூட்ஸ் ஹல்வா
10. குங்குமப்பூ ஜாங்கிரி
11. கலாகந்த்
12. குங்குமப்பூ பேடா
13. குஞ்சா பேடா
14. குங்குமப்பூ லட்டு
15. மாலாடு
16. மால்பூவா
17. மங்களூர் போளி
18. தேங்காய் கோவா
19. மனோகரம் உருண்டை
20. ரஸமலாய்
21. ரஸகுல்லா
22. ரவாலாடு
23. ஸோன்பப்டி கேக்
24. ஸோன்பப்டி பேலக்ஸ்
25. சூரத்காரி
26. ஸ்வீட் ஸோமாஸ்
27. திருகுஞ்சம்
28. குங்குமப்பூ வீட்ஹல்வா
29. வெல்லட் சீடை
30. பெங்காலி ஸ்வீட்
31. லவங்கலதா

## கார வகைகள்

1. பாம்பே பொட்டேடோசிப்ஸ்
2. பாம்பே அவல் மிக்ஸர்
3. பாம்பே மிக்ஸர்
4. பட்டர் மிக்ஸர்
5. கார்ன்ப்ளக்ஸ் மிக்ஸர்
6. சிப்ஸ் (வாழைக்காய் & உருளை கிழங்கு)
7. முறுக்கு
8. மசாலா வேர்க்கடலை
9. முள்ளுத் தேன்குழல்
10. நவரத்ன மிக்ஸர்
11. மிளகு வடை
12. ரிப்பன் பகோடா
13. ரயில் கட்டிடம்
14. சீடை
15. சீப்புச் சீடை
16. ஸ்பெஷல் மிக்ஸர்
17. செய்கோட்டி
18. தட்டை
19. தேன்குழல்
20. வறுபயிறு
21. வெஜிடேபிள் சமோசா
22. பகோடா



ணாங்க. நீங்க பதினோராவது இடம். எல்லாரும் சாப்பிட்டாங்க. போய் 'பொண்ணு படிக்கலை. வேணாம்னு கடிதாச போட்டாங்க. உங்களை எப்படியாச்சும் முடிச்சிடணும்னு அப்பா....''

''பொய் சொல்ல வெட்கமாயில்லே? அம்பத்திரெண்டு பர்செண்டா?''

''பாஸான பேப்பர்ல சேர்த்து அம்பத்து ரெண்டு....''

''இது விளையாட்டில்ல உஷா. பரீட்சைல பெயிலானா அடுத்த தடவை எழுதிக்கலாம். இது வாழ்க்கை. உங்கழுத்துல ஒரு தடவை முடிச்சுப் போட்டேன்னா அவிழ்க்க முடியாது. எங்கஷ்டம் எல்லாம் சொல்லியும் பொய் சொன்னியே. அது தப்பு உஷா. நீ உண்மையைச் சொல்லியிருக்கலாம். 'மூணு பேப்பர் இருக்கு. எழுதிடுறேன். பிறகு கல்யாணம் வச்சிக்கலாமானு' கேட்டிருந்தா சந்தோஷப்பட்டிருப்பேன் உஷா.''

''........''

''நானும் நினைச்சா பொய் சொல்லியிருந்திருக்கலாம் உஷா. அஞ்சாயிரம் சம்பளம்னு சொல்லியிருக்கலாம். மாசம் நாலு புடைவை நகைன்னு சொல்லியிருக்கலாம். உறவுங்கறது நம்பிக்கைங்கற அஸ்திவாரத்து மேலதான் வளரணும் — வளர முடியும். அத்னாலதான் நான் என்னைப் பத்தி எல்லாம் சொன்னேன். நீ சொன்னதையும் நம்பினேன். மார்க் ஷீட்டைக் காட்டுனு நான் கேட்டிருந்தா அது அசிங்கம். நீ ஏமாத்திட்டே உஷா. என் நம்பிக்கையைத் தூக்கி எறிஞ்சிட்டே. போதும். பொட்டுனு எல்லாம் அறுந்துடுச்சு!''

அவள் அப்பா ஓடி வந்தார். கையைப் பிடித்துக் கொண்டார். கண்ணில் ஈரம்.

''அவ மாமாவுக்கு அவர் பையனுக்கு இவளைக் கொடுக்கலையேனு கோபம். அதான்....''

''அது எனக்குச் சம்பந்தமில்ல ஸார்...''

''அவர் பையன் நடத்தை சரி கிடையாது. அதான் இவளைக் கொடுக்கலை...''

''ஐ டோண்ட் கேர் ஐ ஸே.'' விஸ்வநாதன் கோபமாய்க் கத்தினான். நந்தகுமார் அவன் தோள் தொட்டு அழுத்தினான்.

''நிதானமா இரு விஸ்வம். இப்ப என்ன... மூணு பேப்பரையும் எழுதின பிறகு...''

எழுதலாம் நந்து. ஆனா அதுக்கப்புறம் உஷாவோட நான்தான குடும்பம் நடத்தணும். அவ எது செஞ்சாலும் சொன்னாலும் சந்தேகம் வரும். பொய் சொல்றாளோனு தோணும். வேணாம் நந்து. நம்பிக்கை இல்லாம குடும்பம் நடத்துறது அசிங்கம். கஷ்டம் எனக்கு மட்டுமில்லை, உஷாவுக்கும்தான். வேற நல்ல மாப்பிள்ளையா உஷாவுக்கு நாமளும் சேர்ந்து பார்ப்போம் நந்து. இதை விட்டுடுவோம்... ப்ளீஸ்...

அத்தனையும் நிசப்தமாகிவிட விஸ்வநாதன் வெளியே வந்தான். காற்று பட்டு மரக் கிளைகள் அசைந்ததில் வாசற்படியில் நிழல் மறைந்து வெயில் விழுந்தது. 'பகலின் நிஜம் வெயில்தான். நிழலில்லை' — நினைத்துக் கொண்டான் விஸ்வம்.

# உச்சிவெயிலில் ஒரு பேட்டி!

**'கொளுத்தும் வெயிலை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?'**
**நண்பகல் பன்னிரண்டு மணிக்குக் கிளம்பி, ஒரு சிலரிடம்**
**இந்தக் கேள்வியைக் கேட்டபோது சொன்னார்கள்:**




• 'தினம் ஒரு கிளாஸ் கரும்பு ஜூஸ்...'

**ராஜேந்திரன்:** இவருக்கு. கிடங்கிலிருந்து சமையல் எரிவாயு சிலிண்டர்களை எடுத்துக் கொண்டு போய், வாடிக்கையாளர்களின் வீடுகளில் சப்ளை செய்கிற வேலை. ''தினமும் மூன்று தடவைகள், கிடங்கிலிருந்து சிலிண்டர்களைக் கொண்டு போக வேண்டியிருப்பதால், வெயிலைத் தவிர்க்கவே முடியாது. விலாசம் சரியில்லை எனில், வெயிலில் தாவு தீர்ந்துவிடும் சார்'' என்கிற இவர், தொடர்கிறார்: ''சில பேர் வீட்டில் தானாகவே முன்வந்து தண்ணீரோ, ஃபிரிட்ஜ் இருந்தால் ஐஸ் வாட்டரோ தருவார்கள். சிலர் மோர் தருவதும் உண்டு; சில சமயங்களில் நானாகவே தண்ணீர் கேட்பேன். வெளியில் கடைகளில், ஜூஸ் வகையறா வாங்கிச் சாப்பிட வசதி இல்லை.''

**குமார்:** இந்த ரிக்ஷாக்காரருக்கு இப்போதெல்லாம் சவாரி கிடைப்பதே கஷ்டமாகிவிட்டது என்று குறை. காரணம், மக்கள் வெயிலுக்குப் பயந்து கொண்டு, வெளியிலே கிளம்புவதில்லை. மாலை நேரங்களிலும், காலார நடக்க விரும்புகிறார்கள். ''வெயில் நேரங்களில், சவாரி உட்கார்ந்திருக்கும் போது, ரிக்ஷாவை மிதித்தால், வியர்வை ஆறாய்ப் பெருகும். இடையிடையே கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக் கொண்டும், ரிக்ஷாவிலேயே வைத்திருக்கும் பாட்டிலிலிருந்து தண்ணீர் எடுத்துக் குடித்துக் கொண்டும் சமாளிப்பேன். இந்த வெயிலால், பிழைப்பும் டல்; செலவும் அதிகம்,'' என்கிறார் குமார்.

**மாதவன்:** பல்லவன் கண்டக்டர் மாதவன் சொல்கிறார்; ''பஸ்ஸுக்குள் எப்போது பார்த்தாலும் செமை நெரிசல்; புழுக்கம் சொல்லி மாளாது. டிக்கெட் கொடுத்த பின்னர், அடுத்த சில நிமிடங்களுக்குப் படிக்கட்டுப் பகுதியில் நின்று கொண்டு லேசாய்க் காற்று வாங்குவேன்; ஒரு துண்டைக் கையிலேயே வைத்துக் கொண்டு அவ்வப்போது துடைத்துக் கொள்வேன். தி.நகரிலிருந்து புறப்படுமுன், நன்கு முகம் கழுவிக் கிளம்பினால், பாரீஸ் போனதும் மறுபடி முகம் கழுவுவேன்.''

**சின்னசாமி:** சின்னசாமி, கடந்த



• 'ஜூஸ் வாங்க வசதியில்லை.'



* 'பானை தண்ணிதான்; வேற இன்னாத்தப்பண்ண?'

நான்கு ஆண்டுகளாய்ப் போக்கு வரத்துப் போலீஸ்காரராய் இருக்கிறார். "வெயில் கொடுமை தாங்க முடியலைதான்; ஆனாலும் கடமை என்று ஒன்று இருக்கிறதே! என்ன செய்ய? சுட்டெரிக்கும் வெயிலில், வண்டிகளின் இரைச்சலுக்கிடையே, உஷ்ணக்காற்று உடம்பை உரச, நிற்கிற கஷ்டம் அனுபவித்தால் தான் உணர முடியும். அவ்வப்போது, கொஞ்ச நேரம் நிழலில் ஒதுங்குவதும், அருகிலுள்ள கடையில் ஒரு தரம் குளிர் பானம் பருகுவதும்தான் வெயிலைச் சமாளிக்க நான் கடைப்பிடிக்கும் உபாயங்கள்" என்கிறார்.

**சுப்பிரமணி:** ஐம்பது வயது சுப்பிர மணி தினமும், தெருத்தெருவாய், கைவண்டியில் ஐஸ் வியாபாரம் செய்பவர். இந்தப் பெரியவர் காலில் செருப்புக்கூட அணியாமல் நடந்தது, வேதனையளித்தது. "தினமும் ஏதோ இரண்டொரு ரூபாய்க்குக் கரும்பு ஜூஸ் சாப்பிட்டுவிட்டுச் சும்மா கிடப்பேன். ரொம்பவும் வெயில் தாங்க வில்லையெனில், பெட்டியிலிருந்தே ஒரு ஐஸை (மிகச் சாதாரண வெரைட்டி) எடுத்துச் சாப்பிடுவேன். உச்சி வெயில் நேரத்தில் வள்ளுவர் கோட்டத்துக்கு வந்து, நிழலில் நின்று கொண்டு விடுவேன். நிழலுக்கு நிழலுமாச்சு; வியாபாரமும் நடக்கும்.



* 'வெயில் சுட்டெரித்தாலும் கடமை இருக்கிறதே...!'



* 'பிழைப்பும் டல்; செலவும் அதிகம்!'

**ராஜம்:** "ஆமா! வெயில்தான்! அதுக்குன்னு நாம இன்னா செய்ய முடியும்," என்கிறார் சித்தாள் வேலை பார்க்கும் இவர். "நமக்கும் வயிறுன்னு ஒண்ணு இருக்குதே! வெயில் தாங்கலைன்னா; கொஞ்ச நேரம் நிழல்ல குந்திக்குவேன். ஈரத்துணியால் உடம்பைத் தொடச்சுக்கிட்டா, கொஞ்சம் நல்லா இருக்கும். பானையில் தண்ணீர் வெச்சிருந்து, அப்பப்போ அந்த ஜில்லு தண்ணியைக் குடிச்சா நிம்மதியா

* 'பஸ்ஸுக்குள் புழுக்கம் சொல்லி மாளாது!'




யிருக்கும். நடுநடுவே மோர் வாங்கியாந்து குடிப்போம். வேறே இன்னாத்தப் பண்ண முடியும்?"

பேட்டி: ஜூலி

படங்கள்: சோமு

# பாசம்



விடிந்து விட்டது. கண்களை விழித்த பாபு, எதிரே இருந்த முருகன் தன்னையே பார்ப்பதை உணர்ந்தான். தூக்கம் தெளியாத நிலை.

''என்ன அப்படிப் பார்க்கறீங்க?'' என்றான் முருகன்.

''நீ காலங்காத்தாலே படுக்கைக் கிட்டேயே வந்து நிற்கிறதுனால எதுவும் விசேஷமான்னு பார்த்தேன்!''

''ஒண்ணும் விசேஷம் இல்லீங்க. ஒரு பத்து ரூபா பணம் வேணும்!''

''அதானே பார்த்தேன்! காரணமில்லாம இவ்வளவு தூரம் நீ வர மாட்டியே! சரி எப்ப திருப்பித் தருவே!''

''ஒரு வாரத்துலே தந்துடுவேன்!''

எழுந்து பாக்கெட்டிலிருந்து பத்து ரூபாயை எடுத்துக் கொடுத்தான். மனைவி சியாமளா, காப்பியுடன் வந்தவள், இருவரையும் மாறி மாறிப் பார்த்தான். பின்பு கையிலிருந்த காப்பியை முருகனிடம் நீட்டிவிட்டு உள்ளே போனாள்.

முருகன் போனதும் சியாமளா வெடித்தாள். ''கூடப் பிறந்த தம்பி தானே! வேலையில்லாமல் கஷ்டப்படறார், பத்து ரூபாய் கேட்டால் பேசாமல் தரக்கூடாதா! கரெக்டாக் கெடுவச்சுத் தர்றீங்களே!''

''கூடப் பிறந்த தம்பிதான்! யாரு இல்லேங்கறா... அதுக்காக இனாமா எப்படித் தர்றது? அப்பாவே தர மாட்டேங்கறார். அவன் கேட்கும்போதெல்லாம் சும்மா குடுத்திட்டிருந்தா அவன் கௌரவந்தான் என்ன ஆகும்? அவனா ஒரு வேலை தேடிக் கிட்டுப் பொறுப்பா இருக்கணும் இல்லை....?''

''வேலை கிடைச்சாத்தானே போவாரு? ஆனாலும் நீங்க ரொம்ப மோசங்க....''

''உனக்குத் தெரியாது சியாமளா! நான் கடன்னு சொல்லித் தர்றதுனாலத்தான் அவன் எப்ப உதவி வேணுமானாலும், தயங்காம வர்றான். அகப்பட்ட வேலையைச் செய்யறான். இப்பவும், எங்கேயோ போர்டு எழுதணும், பெயிண்ட் வாங்குவதற்குப் பணம் குறையுதுன்னு தான் வந்திருந்தான். போர்டு எழுதி முடிச்சதும் வர்ற பணத்துல எனக்குப் பத்து ரூபாயைத் தந்துடுவான். மிச்சத்தை அப்பாகிட்டே தருவான். இனாமா தந்தா இந்தப் பொறுப்புணர்வு இருக்காதே! ..... ஒண்ணேஒண்ணை நீ நல்லாத் தெரிஞ்சுக்கணும். அவன் கடன்கூட என்னைத் தவிர வேறே யார் கிட்டேயும் கையேந்திக் கேட்க மாட்டான். இதுக்காகவே, நான் என்னோட செலவைக் குறைச்சிக்கிட்டுக் கையிலே எப்பவும் பத்து ரூபாயாச்சும் இருக்கிற மாதிரி பார்த்துக்குவேன்.

சியாமளாவுக்குப் பாசத்தின் அர்த்தம் புரிவது போலிருந்தது.

**நாகை கவின்**



## முதல் அத்தியாயம்
## மூன்று குரல்கள்

நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பொன்னியின் செல்வர் பொறுமையுடன் காத்துக் கொண்டிருந்தார். தஞ்சைக்குச் சென்று தந்தை தாயாரைப் பார்க்க வேண்டுமென்ற ஆர்வம் அவர் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்தது. இலங்கையின் அரசைத் தாம் கவர எண்ணியதாகத் தம் மீது சாட்டப்பட்ட குற்றம் ஆதாரமற்றது என்று நிரூபிக்க அவர் ஆர்வம் கொண்டிருந்தார். தந்தையின் வாக்கை மீறி நடந்ததாகத் தம் மீது ஏற்படக் கூடிய அபவாதத்தைக் கூடிய விரைவில் போக்கிக் கொள்ளவும் அவர் விரும்பினார்.

ஆயினும், தமது ஆர்வத்தையெல்லாம் அடக்கிக் கொண்டு, தமக்கையாரிடமிருந்து செய்தி வந்த பின்னர்தான் தஞ்சைக்குப் புறப்பட வேண்டுமென்று உறுதியாக இருந்தார்.

பொழுது போவது என்னமோ மிகவும் கஷ்டமாக இருந்தது. புத்த பிக்ஷுக்கள் தினந்தோறும் நடத்திய ஆராதனைகளிலும் பூஜைகளிலும் கலந்து கொண்டு சிறிது நேரத்தைப் போக்கினார்.

சூடாமணி விஹாரத்தின் சுவர்களிலே தீட்டப்பட்டிருந்த அருமையான சித்திரக் காட்சிகளைப் பார்ப்பதில் சிறிது நேரம் சென்றது.

பிக்ஷுக்களுடன், முக்கியமாகச் சூடாமணி விஹாரத்தின் ஆச்சாரிய பிக்ஷுவுடன் சம்பாஷிப்பதிலே கழிந்த பொழுது அவருக்கு உற்சாகத்தை அளித்தது.

ஏனெனில் சூடாமணி விஹாரத்தின் தலைமைப் பிக்ஷு கீழ்த்திசைக் கடலுக்கு அப்பாலுள்ள பற்பல நாடுகளிலே வெகு காலம் யாத்திரை செய்தவர். சீன தேசத்திலிருந்து சாவகத் தீவு வரையில் பல ஊர்களுக்கும் சென்று வந்தவர். அந்தந்த நாடுகளைப் பற்றியும் அவற்றிலுள்ள நகரங்களைப் பற்றியும் ஆங்காங்கு வசித்த மக்களைப் பற்றியும் அவர் நன்கு எடுத்துக் கூற வல்லவராயிருந்தார்.

சீன தேசத்துக்குத் தெற்கே கடல் சூழ்ந்த பல நாடுகள் அந் நாளில் ஸ்ரீ விசயம் என்னும் சாம்ராஜ்யத்தில் அடங்கியிருந்தன. அருமணை நாடு, காம்போஜ தேசம், மானக்கவாரம், தலைத் தக்கோலம், மாபப்பாளம், மாயிருடிங்கம், இலங்காசோகம், தாமரலிங்கம், இலாமுரி தேசம் முதலிய பல நாடுகளும் நகரங்களும் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்துக்கு உட்பட்டோ, நேசப்பான்மையுடனோ இருந்து வந்தன. இவற்றுக்கெல்லாம் நடுநாயகமாகக் கடாரம் என்னும் மாநகரம் இணையற்ற சீர் சிறப்புக்களுடனும் செல்வ வளத்துடனும் விளங்கி வந்தது.

அந்த நாடு நகரங்களைப் பற்றி விவரிக்கும்படி ஆச்சாரிய பிக்ஷுவுக்கு ஓய்வு கிடைத்தபோதெல்லாம் பொன்னியின் செல்வன் அவரைக் கேட்டு வந்தான். அவரும் அலுப்புச் சலிப்பில்லாமல் சொல்லி வந்தார். அந் நாடுகளில் உள்ள இயற்கை வளங்களைப் பற்றியும் வர்த்தகப் பெருக்கத்தைப் பற்றியும் கூறினார். பொன்னும் மணியும் கொழித்துச் செந் நெல்லும் கரும்பும் செழித்துச் சோழ வள நாட்டுடன் எல்லா வகையிலும் போட்டியிடக் கூடிய சிறப்புக்களுடன் அந் நாடுகள் விளங்குவதைப் பற்றிக் கூறினார். பழைய காலத்திலிருந்து தமிழகத்துக்கும் அந்த நாடுகளுக்கும் உள்ள தொடர்புகளைப் பற்றிக் கூறினார். பல்லவ நாட்டுச் சிற்பிகள் அந்த தேசங்களுக்குச் சென்று எடுப்பித்திருக்கும் அற்புத சிற்பத் திறமை வாய்ந்த ஆலயங்களைப் பற்றிச் சொன்னார். தமிழகத்திலிருந்து சென்ற சித்திர, சங்கீத, நாட்டியக்



கலைகள் அந் நாடுகளில் பரவியிருப்பதைப் பற்றியும் கூறினார். இராமாயணம், மகா பாரதம் முதலிய இதிகாசங்களும், விநாயகர், சுப்பிரமணியர், சிவன், பார்வதி, திருமால் ஆகிய தெய்வங்களும், புத்த தர்மமும் அந்த தேசத்து மக்களின் உள்ளங்களில் கலந்து குடிகொண்டிருப்பதையும், ஒன்றோடொன்றுபிரித்துஉணரமுடியாதவர்களாக அந் நாட்டு மக்கள் எல்லாத் தெய்வங்களையும் வணங்கி வருவதையும் எடுத்துச் சொன்னார். தமிழ்மொழியின் தந்தையாகிய அகஸ்திய முனிவருக்கு அந்த நாடுகளில் விசேஷ மரியாதை உண்டு என்பதையும், அம் முனிவருக்குப் பல கோயில்கள் கட்டியிருப்பதையும் கூறினார்.


தையெல்லாம் திரும்பத் திரும்ப அருள்மொழிவர்மர் கேட்டுத் தெரிந்து மனத்திலும் பதிய வைத்துக் கொண்டார். அந்தந்த தேசங்களுக்குத் தரை வழியான மார்க்கங்கங்களையும் கடல் வழியான மார்க்கங்களையும் இளவரசர் நன்கு விசாரித்து அறிந்தார். வழியில் உள்ள அபாயங்கள் என்ன, வசதிகள் என்ன என்பதையும் கேட்டு அறிந்தார்.

"சுவாமி! அந்த நாடுகளில் மறுபடியும் தாங்கள் யாத்திரை செய்யும்படியாக நேரிடுமா?" என்று வினவினார்.

"புத்த பகவானுடைய சித்தம் போல் நடக்கும். இளவரசே! எதற்காகக் கேட்கிறீர்கள்?" என்றார் பிக்ஷு.

"நானும் தங்களுடன் வரலாம் என்ற ஆசையினால்தான்."

"நான் உலகத்தைத் துறந்த சந்நியாசி; தாங்கள் புவி ஆளும் சக்கரவர்த்தியின் திருக்குமாரர். தாங்களும் நானும் சேர்ந்து யாத்திரை செய்வது எப்படி? தங்களைச் சில நாள் இந்த விஹாரத்தில் வைத்துக் காப்பாற்றும் பொறுப்பே எனக்குப் பெரும் பாரமாயிருக்கிறது. எப்போது என்ன நேருமோ என்று நெஞ்சு திக், திக், என்று அடித்துக் கொள்ளுகிறது...."

"சுவாமி! அந்தப் பாரத்தை உடனே நிவர்த்தி செய்ய விரும்புகிறேன். இந்தக் கணமே இங்கிருந்து...."

"இளவரசே! ஒன்று நினைத்து ஒன்றைச் சொல்லி விட்டேன். தங்களை இங்கு வைத்துக் கொண்டிருப்பது பாரமாயிருந்தாலும் அதை ஒரு பாக்கியமாகக் கருதுகிறேன். தங்கள் தந்தையாகிய சக்கரவர்த்தியும் தமக்கையார் இளையபிராட்டியும் புத்த தர்மத்துக்கு எவ்வளவோ உதவி செய்திருக்கிறார்கள். அதற்காக நாங்கள் பட்டிருக்கும் நன்றிக் கடனில் ஆயிரத்தில் ஒரு பங்குக்குக் கூட இப்போது நாங்கள் செய்வது ஈடாகாது. தாங்கள் புத்த தர்மத்துக்குச் செய்திருக்கும் உதவிதான் அற்ப சொற்பமானதா? அனுராதபுரத்தின் சிதிலமான ஸ்தூபங்களையும் விஹாரங்களையும் செப்பனிடச் செய்த கைங்கரியத்தை நீங்கள் மறக்க முடியுமா? அதற்கெல்லாம் இணையான பிரதி உபகாரமாக ஈழ நாட்டின் மணி மகுடத்தையே தங்களுக்கு அளிக்கப் பிக்ஷுகள் முன்வந்தார்கள். இளவரசே! அதை ஏன் மறுத்தீர்கள்? இலங்கையின் சுதந்திர சிங்காதனத்தில் தாங்கள் ஏறியிருந்தால், நூறு நூறு கப்பல்களில் ஏராளமான பரிவாரங்களுடனே கீழ்த்திசை நாடுகளுக்குத் தாங்கள் போய் வரலாமே? இந்தப் பிக்ஷுவைப் பின்தொடர்ந்து யாத்திரை செய்ய வேண்டுமென்ற விருப்பமே, தங்கள் மனத்தில் தோன்றியிராதே?" என்றார் ஆச்சாரிய பிக்ஷு.

"குருதேவரே! இலங்கை இராஜ குலத்தின் சரித்திரத்தைக் கூறும் 'மகா வம்சம்' என்னும் கிரந்தத்தைத் தாங்கள் படித்ததுண்டா?" என்று இளவரசர் கேட்டார்.

"ஐயா! இது என்ன கேள்வி? 'மகா வம்சம்' படிக்காமல் நான் இந்தச் சூடாமணி விஹாரத்தின் தலைவனாக ஆகியிருக்க முடியுமா?"

"மன்னிக்க வேண்டும். 'மகா வம்சம் படித்ததுண்டா?' என்று தங்களிடம் கேட்டது, தங்களுக்குப் படிக்கத் தெரியுமா என்று கேட்பது போலத்தான். ஆனால், அந்த மகா வம்சம் கூறும் அரச பரம்பரையில் யார்

அமரர் கல்கி

யார் என்னென்ன பயங்கரமான கொடும் பாவங்களைச் செய்திருக்கிறார்கள் என்று தங்களுக்குத் தெரியும் அல்லவா? மகன் தந்தையைச் சிறையில் அடைத்தான்; தந்தை மகனை வெட்டிக் கொன்றான்; தாய் மகனுக்கு விஷமிட்டுக் கொன்றாள்; தாயை மகன் தீயிலே போட்டு வதைத்தான்!... பெற்றோர்களுக்கும் பெற்ற மக்களுக்கும் உறவு இப்படி என்றால், சித்தப்பன்மார்கள், மாமன்மார்கள், சிற்றன்னை பெரியன்னைமார்கள், அண்ணன் தம்பிகள் — இவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. குருதேவரே! இப்படிப்பட்ட கொடும் பாதகங்களை இலங்கை அரச குலத்தினர் செய்தனர் என்று 'மகா வம்சம்' கூறுகிறதல்லவா?''

''ஆம், ஆம்! அத்தகைய தீச் செயல்களுக்கு அவரவர்கள் அடைந்த தண்டனைகளையும் கூறுகிறது. அந்த உதாரணங்களைக் காட்டி மக்களைத் தர்மமார்க்கத்தில் நடக்கும்படி 'மகா வம்சம்' உபதேசிக்கிறது. அதை மறந்து விட வேண்டாம்! மகா வம்சம் புனிதமான கிரந்தம். உலகிலே ஒப்புயர்வற்ற தர்ம போதனை செய்யும்




நூல்!'' என்று ஆச்சாரிய பிக்ஷு பரபரப்புடன் கூறினார்.

''சுவாமி! 'மகா வம்சம்' என்ற நூலை நான் குறை சொல்லவில்லை. இராஜ்யாதிகார ஆசை எப்படி மனிதர்களை அரக்கர்களிலும் கொடியவர்களாக்கி விடுகிறது என்பதைப் பற்றித்தான் சொன்னேன். அத்தகைய கொடும் பாவங்களினால் களங்கமடைந்த இலங்கைச் சிம்மாதனத்தை நான் மறுதளித்தது தவறாகுமா?''

''மகா புத்திமான்களான புத்த சங்கத்தார் அதனாலேதான் இலங்கை அரச வம்சத்தையே மாற்ற விரும்பினார்கள். தங்களை முதல்வராகக் கொண்டு புதிய வம்சம் தொடங்கட்டும் என்று எண்ணினார்கள். தாங்கள் அதை மறுத்தது தவறுதான். இலங்கைச் சிங்காதனத்தில் வீற்றிருந்து அசோக வர்த்தனரைப் போல் உலகமெல்லாம் புத்த தர்மத்தைப் பரப்பிப் பாதுகாக்கும் வாய்ப்பு தங்களுக்குக் கிடைத்தது...''

''குருதேவரே! பரத கண்டத்தை ஒரு குடை நிழலில் ஆண்ட அசோகவர்த்தனர் எங்கே? இன்று இந்தப் புத்த விஹாரத்தில் ஒளிந்து கொண்டு தங்கள் பாதுகாப்பை நாடியிருக்கும் இந்தச் சிறுவன் எங்கே? உண்மையில், தங்கள் சீடனாகக்கூட நான் அருகதையில்லாதவன். புத்த தர்மத்தை எப்படிப் பாதுகாக்கப் போகிறேன்?.....''

''இளவரசே! அவ்விதம் சொல்ல வேண்டாம். தங்களிடம் மறைந்து கிடக்கும் மகா சக்தியைத் தாங்கள் அறியவில்லை. தாங்கள் மட்டும் புத்த தர்மத்தை மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டால் அசோகரைப் போல் புகழ் பெறுவீர்கள்....''

''என் உள்ளத்தில் இளம்பிராயத்திலிருந்து விநாயகரும் முருகனும் பார்வதியும் பரமேசுவரனும் நந்தியும் பிருங்கியும் சண்டிகேசுவரரும் கோயில் கொண்டிருக்கிறார்கள். அவர்களையெல்லாம் அப்புறப்படுத்தி விட்டல்லவா புத்த தர்மத்துக்கு இடங் கொடுக்க வேண்டும்? குருதேவரே! அடியேனை மன்னியுங்கள். தங்களுடனே நான் யாத்திரை வருகிறேன் என்று சொன்னபோது புத்த தர்மத்தில் சேர்ந்து விடுவதாக எண்ணிச் சொல்லவில்லை. கடல்களைக் கடந்து தூர தூர தேசங்களுக்குப் போய்ப் பார்க்கும் ஆசையினால் தங்களுடன் வருவதாகச் சொன்னேன்! ஆனாலும் மறுபடி யோசிக்கும் போது....''

''இளவரசே! தங்கள் வார்த்தையை நான் தவறாகத்தான் புரிந்து கொண்டேன். ஆனாலும் புத்த தர்மத்துக்கும் தங்களுக்கும் தொடர்பு இல்லாமற்போகவில்லை. புத்த பகவானுடைய பூர்வ ஜன்மம் ஒன்றில் அவர் சிபிச் சக்கரவர்த்தியாக அவதரித்திருந்தார். புறாவின் உயிரைக் காப்பாற்றுவதற்காகத் தமது சதையை அவர் அரிந்து கொடுத்தார். அந்தச் சிபியின் வம்சத்திலே வந்தவர்கள் சோழ குலத்தினர். ஆகையினாலேதான் உங்கள் குலத்தில் பிறந்தவர்களுக்குச் 'செம்பியன்' என்ற பட்டம் ஏற்பட்டிருக்கிறது.

இதைத் தாங்கள் மறந்து விட வேண்டாம்.''

''மறக்கவில்லை, குருதேவரே! மறந்தாலும் என் உடம்பில் ஓடும் இரத்தம் என்னை மறக்க விடுவதில்லை. ஒரு பக்கத்தில் சிபிச் சக்கரவர்த்தியும் மனுநீதிச் சோழரும் என்னுடைய இரத்தத்திலேயும் சதையிலேயும் எலும்பிலேயும் கலந்திருந்து, 'பிறருக்கு உபகாரம் செய்; மற்றவர்களுக்காக உன்னுடைய நலங்களைத் தியாகம் செய்!' என்று வற்புறுத்திக் கொண்டேயிருக்கிறார்கள். மற்றொரு பக்கத்தில் கரிகால் வளவரும் விஜயாலய சோழரும் பராந்தக சக்கரவர்த்தியும் என்னுடைய இரத்தத்திலே சேர்ந்திருந்து 'கையில் கத்தியை எடு! நால் வகைச் சைனியத்தைத் திரட்டு! நாலு திசையிலும் படை எடுத்துப் போ! கடல் கடந்து போ! சோழ சாம்ராஜ்யத்தை விஸ்தரித்து உலகம் காணாத மகோந்நதம் அடையச் செய்!' என்று இடித்துக் கூறுகிறார்கள். இன்னொருபுறத்தில் சிவனடியார் கோச் செங்கணாரும், தொண்டைமண்டலம் பரவிய ஆதித்த சோழரும், மகானாகிய கண்டராதித்தரும் என் உள்ளத்தில் குடி கொண்டு 'ஆலயத் திருப்பணி செய்! பெரிய பெரிய சிவாலயங்களை எழுப்பு! மேரு மலைபோல் வானளாவி நிற்கும் கோபுரங்களையுடைய கோவில்களை நிர்மாணி!' என்று உபதேசித்துக் கொண்டேயிருக்கிறார்கள். என் முன்னோர்கள் இவ்வளவு பேருக்கும் நடுவில் கிடந்து நான் திண்டாடுகிறேன். குருதேவரே! அவர்களுடைய தொந்தரவுகளைப் பொறுக்க முடியாமல் உண்மையாகவே சில சமயம் எனக்குப் புத்த சமயத்தை மேற்கொண்டு பிக்ஷுவாகி விடலாம் என்று கூடத் தோன்றுகிறது. கருணை கூர்ந்து எனக்குப் பௌத்த சமயத்தைப் பற்றிச் சொல்லுங்கள். புத்த பகவானைப் பற்றிச் சொல்லுங்கள்!'' என்றார் பொன்னியின் செல்வர்.

இதைக் கேட்ட பிக்ஷுவின் முகம் மிக்க மலர்ச்சியடைந்து விளங்கியது.

''இளவரசே! பௌத்த மதத்தைப் பற்றியும் புத்த பகவானைப் பற்றியும் தாங்கள் அறியாதது என்ன இருக்கக் கூடும்?'' என்றார்.

அதோ அந்தச் சுவர்களில் காணப்படும் சித்திரக் காட்சிகளை விளக்கிச் சொல்லுங்கள். அங்கே ஓர் இராஜ குமாரர் இரவில் எழுந்து போகப் பிரயத்தனப்படுவது போல் ஒரு சித்திரம் இருக்கிறதே? அது என்ன? அவர் அருகில் படுத்திருக்கும் பெண்மணி யார்? தொட்டிலில் தூங்கும் குழந்தை யார்? அந்த இராஜகுமாரர் முகத்தில் அவ்வளவு



கவலை குடிகொண்ட தோற்றம் ஏன்?'' என்று இளவரசர் கேட்டார்.

''ஐயா! புத்த பகவான் இளம் பிராயத்தில் தங்களைப் போல் இராஜ குலத்தில் பிறந்த இளவரசராக இருந்தார். யசோதரை என்னும் நிகரற்ற அழகு வாய்ந்த மங்கையை மணந்திருந்தார். அவர்களுக்கு ஒரு செல்வப் புதல்வன் பிறந்திருந்தான். தகப்பனார் இராஜ்ய பாரத்தை அவரிடம் ஒப்புவிக்கச் சித்தமாயிருந்தார். அந்தச் சமயத்தில் சித்தார்த்தர் உலகில் மக்கட் குலம் அநுபவிக்கும் துன்பங்களைப் போக்குவதற்கு வழி கண்டு பிடிக்க விரும்பினார். இதற்காக அருமை மனைவியையும் செல்வக் குழந்தையையும் இராஜ்யத்தையும் விட்டுப் போகத் தீர்மானித்தார். அவர் நள்ளிரவில் அரண்மனையை விட்டுப் புறப்படும் காட்சிதான் அது. இளவரசே! இந்த வரலாற்றைத் தாங்கள் முன்னம் அறிந்ததில்லையா?''

''ஆம், ஆம்! பலமுறை கேட்டு அறிந்து கொண்டிருக்கிறேன். ஆனால் இந்தச் சித்திரத்தில் பார்க்கும் போது மனத்தில் பதிவது போல் வாயினால் கேட்ட வரலாறு பதியவில்லை. தூங்குகின்ற யசோதரையை எழுப்பிச் 'சித்தார்த்தர் உன்னை விட்டுப் போகிறார்; அவரைத் தடுத்து நிறுத்து!' என்று எச்சரிக்கத் தோன்றுகிறது. சரி: அடுத்த சித்திரத்தைப் பற்றிச் சொல்லுங்கள்!''

புத்த பகவானுடைய வரலாற்றைக் குறிப்பிட்ட மற்றச் சித்திரங்களையும் ஒவ்வொன்றாக ஆச்சாரிய பிக்ஷு எடுத்து விளக்கி வந்தார். அருள்மொழி வர்மர் புத்த தர்மத்தைத் தழுவினால் எவ்வளவு நன்றாயிருக்கும் என்ற ஆசை பிக்ஷுவின் இதய அந்தரங்கத்தில் இருக்கத்தான் இருந்தது. ஆகையால் மிக்க ஆர்வத்துடனே சித்தார்த்தருடைய சரித்திரத்தைச் சொல்லி வந்தார். கடைசியில், சித்தார்த்தர் போதி விருட்சத்தின் அடியில் அமர்ந்து தவம் செய்து ஞான ஒளி பெறும் சித்திரத்துக்கு வந்தார்.

அந்தச் சித்திரத்தைக் குறித்து அவர் சொன்ன பிறகு பொன்னியின் செல்வர், ''குருதேவா! தங்கள் கருத்துக்கு மாறாக நான் ஏதேனும் சொன்னால் தங்களுக்குக் கோபம் வருமா?'' என்று கேட்டார்.

''இளவரசே! நான் ஐம்புலன்களை வென்று மனத்தை அடக்கவும் பயின்றவன். தங்கள் கருத்தைத் தாராளமாகச் சொல்லலாம்'' என்றார் பிக்ஷு.

''போதி விருட்சத்தின் அடியில் வீற்றிருந்தபோது சித்தார்த்தர் ஞான ஒளி பெற்றார் என்பதை நான் நம்பவில்லை.''

ஐம்புலன்களையும் உள்ளத்தையும் அடக்கியவராயிருந்தபோதிலும் பிக்ஷுவின் முகம் சுருங்கியது.

''இளவரசே! மகா போதி விருட்சத்தின் ஒரு கிளை அசோக வர்த்தனரின் காலத்தில் இலங்கைக்குக் கொண்டு வரப் பட்டது. அந்தக் கிளை வேர் விட்டு வளர்ந்து ஆயிரம் ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்றைக்கும் பட்டுப்போகாமல் அநுராதபுரத்தில் விசாலமாகப் படர்ந்து விளங்கி வருகிறது. அந்தப் புனித விருட்சத்தைத் தாங்களே அநுராதபுரத்தில் பார்த்திருப்பீர்கள். பின்னர், 'நம்பவில்லை' என்று ஏன் சொல்லுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

''குருதேவரே! போதி விருட்சமே இல்லையென்று நான் சொல்லவில்லை. அதனடியில் அமர்ந்து சித்தார்த்தர் தவம் செய்ததையும் மறுக்கவில்லை. அங்கே தான் அவர் ஞான ஒளி பெற்றார் என்பதைத்தான் மறுத்துக் கூறுகிறேன். என்றைய தினம் சித்தார்த்தர் மக்களுடைய துன்பத்தைத் துடைக்க வழி காண்பதற்காகக் கட்டிய மனைவியையும் பெற்ற மகனையும் உரிமையுள்ள இராஜ்யத்தையும் தியாகம் செய்து நள்ளிரவில் புறப்பட்டாரோ, அப்போதே அவர் ஞான ஒளி பெற்று விட்டார் என்றுதான் சொல்லுகிறேன். அதைக் காட்டிலும் ஓர் அற்புதமான செயலை நான் எந்த வரலாற்றிலும் கேட்டதில்லை. இராமர் தன் தந்தையின் வாக்கைப் பரிபாலனம் செய்வதற்காக இராஜ்யத்தைத் தியாகம் செய்தார். பரதர் தம் தமையனிடம் கொண்ட பக்தியினால் 'இராஜ்யம் வேண்டாம்' என்றார். அரிச்சந்திர மகாராஜா தாம் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக இராஜ்யத்தைத் துறந்தார். சிபிச் சக்கரவர்த்தியும் புறாவுக்கு அடைக்கலம் கொடுத்து விட்ட காரணத்தினால் தன் உடலை அறுத்துக் கொடுத்தார். ஆனால் சித்தார்த்தர் யாருக்கும் வாக்குக் கொடுக்கவில்லை; யாரையும் திருப்தி செய்ய விரும்பவில்லை. மனித குலத்தின் துன்பத்தைப் போக்க வழி கண்டு பிடிக்கும் பொருட்டுத் தாமாகவே எல்லாவற்றையும் தியாகம் செய்து விட்டுப் புறப்பட்டார். புத்த பகவான் போதி விருட்



சத்தின் அடியில் ஞான ஒளி பெற்ற பிறகு இதைக் காட்டிலும் அற்புதமான செயல் ஏதேனும்செய்ததுண்டா? ஆகையால் அரண்மனையை விட்டுப் புறப்பட்ட போதே அவர் ஞான ஒளி பெற்று விட்டார் என்று சொல்வது தவறாகுமா?''



வ்விதம் பொன்னியின் செல்வர் கூறிய மொழிகள் ஆச்சாரிய பிக்ஷுவின் செவிகளில் அமுதத் துளிகளைப் போல் விழுந்தன.

ஐயா! தாங்கள் கூறுவதில் பெரிதும் உண்மையிருக்கிறது. ஆயினும் போதி விருட்சத்தினடியிலேதான் மக்களின் துன்பங்களைப் போக்கும் வழி இன்னதென்பது புத்த பகவானுக்கு உதயமாயிற்று. அதிலிருந்து தான் மக்களுக்குப் பகவான் போதனை செய்யத் தொடங்கினார்.''

''சுவாமி! புத்த பகவானுடைய போதனைகளைக் கேட்டிருக்கிறேன். அந்த போதனைகளைக் காட்டிலும் அவருடைய தியாகச் செயலிலேதான் அதிக போதனை நிறைந்திருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. மன்னிக்க வேணும். நானும் அவருடைய செயலைப் பின்பற்ற விரும்புகிறேன். சற்று முன்னால், என் முந்தையரின் மூன்று விதக் குரல்கள் என் உள்ளத்தில் ஓயாமல் ஒலித்து என்னை வாதனைப் படுத்துவதாகச் சொன்னேன் அல்லவா! அந்தத் தொல்லையிலிருந்து விடுதலை அடைய விரும்புகிறேன். என்னைத் தங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்!'' என்றார் இளவரசர்.

''இளவரசரே! தங்களை யொத்த சீடனைப் பெறுவதற்கு நான் எவ்வளவோ பாக்கியம் செய்திருக்க வேண்டும். ஆனால் அதற்கு வேண்டிய தகுதியும் எனக்கில்லை; தைரியமும் இல்லை. இலங்கையில் புத்த மகா சங்கம் கூடும்போது தாங்கள் விண்ணப்பித்துக் கொள்ளலாம்'' என்றார் பிக்ஷு.

''தங்கள் தகுதியைப் பற்றி எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் தைரியத்தைப் பற்றிச் சொன்னீர்களே, அது என்ன?''

''ஆமாம்; தைரியமும் இல்லைதான்! இரண்டு தினங்களாக இந்த நாகைப் பட்டினத்தில் ஒரு வதந்தி பரவிக் கொண்டு வருகிறது. அதை யார் கிளப்பி விட்டார்கள் என்று தெரியவில்லை. தாங்கள் இந்த விஹாரத்தில் இருப்பதாகவும், தங்களைப் புத்த பிக்ஷுவாக்க நாங்கள் முயன்று வருவதாகவும் ஜனங்கள் ஒருவருக் கொருவர் பேசிக் கொள்கிறார்களாம். இதனால் அனேகர் கோபங்கொண்டிருக்கிறார்களாம். இந்த விஹாரத்தின் மீது மக்கள் படை எடுத்து வந்து உண்மையை அறியவேண்டும் என்றும் பேசிக் கொள்கிறார்களாம்...!''

''ஆகா! இது என்ன பைத்தியக்காரத்தனம்? நான் புத்த மதத்தில் சேர்வது பற்றி ஊரில் உள்ளவர்களுக்கு என்ன கவலை? நான் காவித் துணி அணிந்து சந்நியாச ஆசிரமத்தை மேற் கொண்டால் இவர்கள் ஏன் கோபங் கொள்ள வேண்டும்? இத்தனைக்கும் எனக்குக் கலியாணம் கூட ஆகவில்லையே? மனைவி மக்களை விட்டுப் போகிறேன் என்றுகூடக் குற்றம் சுமத்த முடியாதே?'' என்றார் இளவரசர்.

''ஐயா! ஜனங்களுக்குத் தங்கள் மீது கோபம் எதுவும் இல்லை. தங்களை ஏமாற்றிப் புத்த பிக்ஷுவாக்க முயல்வதாக எங்கள் பேரிலேதான் கோபம். வெறும் வதந்தியே இப்படிப்பட்ட கலக்கத்தை உண்டாக்கியிருக்கிறது. உண்மையாகவே நடந்து விட்டால் என்ன ஆகும்? இந்த விஹாரத்தையே ஜனங்கள் தரை மட்டமாக்கி விடுவார்கள். ஏதோ தங்களுடைய தந்தையின் ஆட்சியில் நாங்கள் நிம்மதியாக வாழ்ந்துவருகிறோம். தினந்தோறும்,

''போதியந் திருநிழற் புனிதநிற் பரவுதும்
மேதகு நந்திபுரி மன்னர் சுந்தரச்
சோழர் வண்மையும் வனப்பும்
திண்மையும் உலகிற் சிறந்து
வாழ்கெனவே!''

எனப் பிரார்த்தனை செய்து வருகிறோம். இந்த நல்ல நிலைமையைக் கெடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. அதனாலேதான் 'தைரியமில்லை' என்று சொன்னேன்'' என்றார் பிக்ஷு.

அவர் கூறி வாய் மூடுவதற்குள்ளே அந்தப் புத்த விஹாரத்தின் வாசற் புறத்தில் மக்கள் பலரின் குரல்கள் திரண்டு ஒருமித்து எழும் பேரோசை கேட்கத் தொடங்கியது.

பிக்ஷு அதைச் செவி கொடுத்துச் சிறிது நேரம் கேட்டுவிட்டு, ''இளவரசே! நான் கூறியது உண்மையென்று நிரூபிக்க மக்களே வந்து விட்டார்கள் போலிருக்கிறது. இதை எப்படிச் சமாளிக்கப் போகிறேனோ, தெரியவில்லை! புத்த பகவான்தான் வழி காட்டியருள வேண்டும்!'' என்றார்.

சூடாமணி விஹாரத்தின் சுற்றுப்புறங்களில் ஆயிரக்கணக்கான மக்களின் கூக்குரல் ஒலி கணத்துக்குக் கணம் அதிகமாகிக் கொண்டு வந்தது.

(தொடரும்)

## சாஸ்திரி பெற்ற வரதட்சிணை!



லால் பகதூர் சாஸ்திரி திருமணத்தின் போது பெண் வீட்டாரிடமிருந்து வரதட்சிணை பெற்றுக் கொண்டார்! சாஸ்திரி பெற்ற வரதட்சிணை ஒரு கைராட்டினமும், சில கஜங்கள் கதர் துணியும் தான்! அவருடைய மாமனார் வசதியுடையவர் இல்லையென்றாலும் தம் மகளுக்கு வரதட்சிணையாகக் கணிசமான ஒரு தொகையைத் தரத் தயாராக இருந்தார். ஆனால் சாஸ்திரி பிடிவாதமாக மறுத்து விட்டார். இதில் மாமனாருக்கு ரொம்ப மனக்குறை!

— 'லால் பகதூர் சாஸ்திரி' என்ற நூலிலிருந்து.

— மன்னை எஸ். எஸ்.

# தண்டனை

காற்று கூரையைப் பிய்த்துவிடும் போல் இருந்தது. மழைத் துளிகள் 'பொட் பொட்' என்று பெரும் சப்தத்துடன் விழுந்தன. குடிசைக்குள் நாகம்மாள் அமைதி இன்றித் தவித்தாள். உள்ளத்தில் எழுந்து விட்ட பயம் வெளிச் சூழ்நிலையால் இன்னும் அதிகமாயிற்று.

மகன் சாரங்கன் சாயங்காலமே வந்து விடுவதாகச் சொல்லி விட்டுப் போனான். இதோ அதோ என்று விளக்கு வைக்கும் வரை எதிர்பார்த்திருந்தவளுக்கு, அப்புறம் தான் ஆரம்பித்தது அந்த திகில்.

செல்லமுத்து விடுதலையாகி வந்து விட்டான்!

முந்தாநாள் அவனை நேரிலேயே இவள் பார்க்கும்படியான ஒரு சந்தர்ப்பம். சத்துணவுக் கூடத்தில் வேலை முடித்து, திரும்பும் போது அவன் வீதியில் எதிர்ப்பட்டான்.

அயோக்கியன், ஏழு வருஷ சிறைவாசம் அனுபவித்தவனாகவா தெரிகிறான்? அவனுடைய பார்வையில் தெரிந்தது குரோதமா, கொலை வெறியா? இவளால் புரிந்து கொள்ள முடியவில்லை.

நாகம்மாளுக்கு உடம்பு நடுங்கியது.

தன் ஏழு வருஷ சிறைவாசத்துக்கும் காரணமாக இருந்த சாரங்கனைச் செல்லமுத்து விட்டு வைப்பானா? மாட்டான்! ஒரு கொலை செய்தவன் அதைத் தொடர்ந்து எத்தனை செய்யவும் அஞ்ச மாட்டான்!

பண்ணையார் மகன் கொலை வழக்கில் அன்றைக்குச் சாரங்கன் மட்டும் பலமான சாட்சியாக இல்லாமல் போயிருந்தால் செல்லமுத்து என்றைக்கோ நிரபராதி என்ற பெயரில் விடுதலையாகி இருப்பான்.

அவனுடைய போதாத நேரமோ அல்லது இவனுடைய போதாத காலமோ அன்றைக்கென்று சாரங்கனை அங்கு கொண்டு போய்ச் சேர்த்தது.

"ஏண்டா அந்தக் கிளையை வெட்டறே?" — என்றான் சாரங்கன்.

மரத்தின் மேல் இருந்த செல்ல முத்துவின் முகத்தில் இவன் எங்கேடா இந்த நேரத்தில் வந்து தொலைந்தான் என்கிற வெறுப்பு அப்பட்டமாகத் தெரிந்தது.

"வேணும்டா" — என்றான் அவன் ஒரே வார்த்தையில்!

"டேய் அது பொதுச் சொத்துடா. அதுவும் எவ்வளவு பெரிசு! யாரும் பார்த்தால் உன் மேலே கேசு போடுவாங்க."

செல்லமுத்து கடுகடுத்தான். "சர்த்தான் போடா....

இதற்குள், சாலை ஓரம் இருந்த அந்தப் பெரிய மரக்கிளை நறநறவென்று முறிந்து பாதையின் குறுக்காகப் 'பொதேர்' என்று விழுந்தது.

செல்லமுத்து முதலில் கோடரியைத் தரையில் எறிந்து விட்டுச் சாவகாசமாக இறங்கினான்.

"நீ எங்கே வந்தே? வீட்டுக்குப் போகலை?" — என்று கேட்டான் சாரங்கனிடம்.

"வாய்க்காலில் குளிக்கணும். அதிருக்கட்டும் எதுக்கடா இது?" — விடாமல் கேட்டான் அவன்.

செல்லமுத்து சாரங்கனின் கேள்வியை ஒரு பொருட்டாகவே கருதவில்லை. எட்டிய வரை சாலையில் எங்கோ தன் பார்வையைப் பதித்தவன், "சரி சரி நீ போ! அப்புறமாச் சொல்றேன்" என்றான் தட்டிக் கழித்து.

அது ஒரு குறுக்குச் சாலை. மெயின் ரோட்டிலிருந்து பிரிந்து கிராமத்துக்குள் வருவது. இங்கொன்றும் அங்கொன்றுமாய் எங்கோ ஒரு சில இடங்களில் மட்டுமே மரங்கள். அந்தக் கடுமையான உச்சி வெய்யிலில் நடமாட்டம் அறவே அற்றுப் போய் இருந்தது.

சாரங்கன் அதற்கு மேல் அவனிடம் எதுவும் பேசவில்லை. சற்றுத் தொலைவில் சாலையின் குறுக்காக ஓடிய வாய்க்கால் ஒன்றில் குளிப்பதற்குப் போய் விட்டான். கவனம் மட்டும் அவனை அறியாமல் செல்லமுத்துவிடமே இருந்தது. செல்லமுத்து நிலைகொள்ளாமல் தவிப்பதும் அதே மரத்தடியில் இங்கும் அங்குமாக

கமலா நடராஜன்



நடப்பதும் தெரிந்தது.

மிகச் சில நிமிடங்களே கடந்திருக்கும். தூரத்தில் மோட்டார் பைக் ஒன்றின் சப்தம், செல்லமுத்து அடிக்கடி திரும்பிப் பார்த்துக் காத்திருந்த திசையிலிருந்து வர —

சாரங்கனும் அரைக் குளியலில் அங்கே திரும்பினான்.

மோட்டார் பைக்கில் வந்தது பண்ணையார் மகன் பாண்டியன். செல்லமுத்து மரக் கிளையை வெட்டிப் போட்டுச் சுத்தமாகவே வழியை மறித்திருக்கிறான்!

பாண்டியன் அவனிடம் என்னவோ கேட்பதும் அவன் ஏதோ பதில் சொல்வதும், நிமிடத்துக்கு நிமிடம் பாண்டியனின் குரல் அதிகரித்து முடிவில் செல்லமுத்துவைப் 'பளார்' என்று அறைவதும் தெரிந்தன.

சாரங்கன் அவசரம் அவசரமாகத் தலையைக் கூடத் துடைத்துக் கொள்ளாமல் அங்கே ஓடினான்.

செல்லமுத்து 'பொத்'தென்று பாண்டியனின் கால்களில் விழுந்தான். ''எனக்கு வேறே வழி தெரியலை. பண்ணை வீட்டுக்கு வந்தால் உங்களைப் பார்க்கக் கூட விட மாட்டேன்றாங்க. மத்த இடங்களிலேயும் என்னை மதிச்சு நீங்க நின்னு ஒரு வார்த்தை கேட்டுக்கறதில்லை! அதனாலதான் வேறே வழி இல்லாம....''

''இப்படிப் பாதை மறிப்புப் போராட்டம் பண்றயா ராஸ்கல்'' — செல்லமுத்துவைத் தன் செருப்புக் காலாலேயே இடறினான் பாண்டியன்.

''ஐயா!'' —அதுவரை திகைத்துப் போய் நின்றிருந்த சாரங்கன் மெதுவாகக் குரல் கொடுக்க —

''பேசாதே வாயைக் கிழிச்சுடுவேன். ரெண்டு பேருமாச் சேர்ந்து அந்தக் கிளையைப் பிடிச்சு நகர்த்திப் போட்டு வழி விடுங்க, இல்லே....''

செல்லமுத்து கெஞ்சினான். ''போடறோம் சின்னையா! ஆனா என் தங்கச்சிக்கு ஒரு வழி சொல்லுங்க. அது உங்களையே நம்பி இருந்தது. இப்போ திடீர்னு உங்க கல்யாணப் பத்திரிகையைப் பார்த்ததும் பிரமை புடிச்சா மாதிரி ஆயிட்டுது. அதோட....''

''கர்ப்பமா வேறே இருப்பாளே'' என்றான் பாண்டியன் ஒருவித ஏளனச் சிரிப்போடு. பிறகு இடைவெளி விடாமலே தொடர்ந்தான். ''டேய் செல்லமுத்து இதெல்லாம் உன்னை மாதிரி பசங்களுக்கு ஒரு குறுக்கு வழிடா. பணக்காரப் பசங்க கிட்டத் தெரிஞ்சே பழக விடறது. அப்புறம் காசு பணம்னு தன் கையைக் கடிக்காமே இப்படி ஒரு சாக்கை வச்சு அவன் தலையிலேயே கட்டிடறது.''

செல்லமுத்து பதறினான் — ''இல்லை சின்னையா! சத்தியமா அது....''

''என்னோட குழந்தைதான் ஒத்துக்கறேன். அதுக்கு நான் என்ன செய்யறது? உன் தங்கச்சி படிச்சவதானே?''

''அந்தத் தகுதியையும் தைரியத்தையும் வச்சுத்தான் எசமான் அவளை உங்களைக் கட்டிக்கச் சொல்றேன். நீங்க ரெண்டு பேரும் டவுனில் ஒண்ணாப் படிச்சப்பவே



# பொறுப்பற்ற டாக்டர்!







உண்டான காதல்தான்னு...''

''உன் தங்கச்சி சொல்லி இருப்பாள்! ஆனா அந்தப் படிப்புக்குத் தகுந்த முன் ஜாக்கிரதை உணர்வு இல்லையே? நான் அவசரப்பட்டேன்னு அவளும் படலாமா? ஏதோ நடந்தது நடந்து போச்சு, அதுக்காகத் தகுதிக்கு மேலே ஆசைப்படறது தப்புன்னு உன் தங்கச்சிக்கிட்டே போய்ச் சொல்லிடு.''

செல்லமுத்துவின் கண்கள் கலங்கின. ''இதைப் போய் நான் அவளிடம் சொன்னால் அவள் செத்துடுவா சின்னையா.''

''பாவம் அப்பா அம்மா இல்லாத பொண்ணு. இப்போ கட்டிக் குடுக்கற பொறுப்பு உன் தலையில விழுந்துடுச்சு இல்லையா...? சரி எனக்கு எத்தனையோ, வேலை. மரியாதையா அந்தக் கிளையை நகர்த்தி வழி விடுங்க.''

சாரங்கன் செல்லமுத்துவைப் பரிதாபமாகப் பார்த்தான்.

செல்லமுத்துவின் உடம்பு ஆத்திரத்திலும் ஆற்றாமையிலும் தடதடவென்று நடுங்கிக் கொண்டிருந்தது. அப்புறம் எப்படித்

கதை: உமா கல்யாணி     படம்: ஜெ...










இடப்படுத்திக் கொண்டானோ!

"சாரங்கா, நீ கொஞ்சம் அந்தப் பக்கம் பிடி" என்று குறுக்காக விழுந்து கிடந்த கிளையின் ஒரு பக்கத்தை அவனுக்குக் காட்டி விட்டு மற்றொரு பக்கம் போய்க் குனிந்தவன், கண் மூடித் திறப்பதற்குள், அங்கே கிடந்த கோடரியுடன் நிமிர்ந்து, பைக்கிலே அமர்ந்திருந்த பாண்டியன் மீது பாய்ந்து....

காது பிய்ந்து விடும்படியான ஓலத்துடன் பாண்டியன் அதிலிருந்து சரியச் சரிய...

செல்லமுத்து ஒரு வகையில் நல்லவன் தான், அதிக நேரம் பாண்டியனைத் துடிக்க வைக்கவில்லை!

வெள்ளமாய்ப் பெருகி வழிந்த ரத்தத் தைக் கண்ட சாரங்கன் ஒரு சில விநாடிகள் எதுவுமே புரியாமல் நிற்க —

"டேய் சாரங்கா, ஓடிடு. யார் கிட்டேயும் இது சம்பந்தமா மூச்சு விடாதே. விட்டே அப்புறம் உன்னோட முடிவும் பயங்கர மாய்த்தான் இருக்கும்!" — கத்திக் கொண்டே வயல்களில் இறங்கிப் பக்கத்தில்

இருந்த தோப்புக்குள் நுழைந்து எங்கோ மறைந்து விட்டான் செல்லமுத்து!

**அ**தன் பிறகு எத்தனையோ சம்பவங்கள்.

செல்லமுத்துவின் தங்கை விஷம் குடித்துச் செத்துப் போனாள்.

போலீஸார் எப்படியோ சாரங்கனை மோப்பம் பிடித்துச் சாட்சிக்குத் தயார் செய்து விட்டனர். செல்லமுத்து இரண்டு மாதங்கள் கழித்து எந்த ஊரிலோ ஒரு டீக் கடையில் வைத்துப் பிடிபட்டான்.

சந்தர்ப்பம் சாட்சி எல்லாவற்றையும் கொண்டு அவனுக்கு ஏழு வருஷ சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

**ஆ**னால் அந்த ஏழு வருஷங்களும் ஏழு நிமிஷமாகப் பறந்து விட்டது போன்ற பயம் இப்பொழுதுதான் நாகம்மாளை ஆட்டுவிக்கத் தொடங்கியது. படுபாவி என்ன திட்டத்தில் இருக்கிறானோ?

காற்றும் மழையும் இப்பொழுது பயங்கர இரைச்சலோடு தொடர்ந்தன. குடிசையின் கதவு காற்றில் அசையும் ஒவ்வொரு முறையும் செல்லமுத்துவாய் இருக்குமோ என்கிற கிலியும், சாரங்கனாய் இருக்கும் என்கிற எதிர்பார்ப்பும் மாறி மாறி அவள் வயிற்றைப் பிசைந்தது.

'டொக் டொக் டொக்' குடிசையின் கதவை யாரோ தட்டுகிற சப்தம்.

''யாரது?'' — கேட்டாள்.

''அம்மா'' — மெலிதாக ஒரு குரல்.

சாரங்கன்தான்.

அவசரமாக ஓடிக் கதவைத் திறந்தவளுக்கு — சாரங்கனைத் தாங்கிப் பிடித்தபடி நின்ற அந்த உருவத்தைப் பார்த்ததும் குலை நடுங்கியது.

செல்லமுத்து!

ஐயோ, சாரங்கனுக்கு என்ன, என்ன செய்து விட்டான் சாரங்கனை?'

செல்லமுத்து அவனை உள்ளே கொண்டு வர, சாரங்கன் ஹிம்சையோடு முனகியபடி கீழே சாய்ந்து படுத்தான். கையிலும் காலிலும் பலமான காயங்கள்.

''பாவி! என்ன செய்தே என் மகனை?''— நாகம்மாள் தன்னை அறியாமல் வீரிட

''சத்தியமா நான் ஒண்ணும் செய்யலை அத்தை. நடந்தது இதுதான். யதேச்சையா இன்னிக்கு நானும் இவனும் டவுன்லேயிருந்து ஒரே பஸ்ஸில் வந்தோம். முதலில் இவன் என்னைக் கவனிக்கலை. கூட்டத்தில் முன் பக்கம் நின்றிருந்தவன் இறங்க வரும் போதுதான் பார்த்திருக்கான். திடீர்னு என்ன தோணுச்சோ பஸ் நிக்கறதுக்குள்ளேயே கீழே குதிச்சு ஓடி வர நினைச்சுத் தடுமாறி விழுந்திருக்கான். கையிலும் காலிலும் பலமான காயங்கள். அப்படியே மயக்கமடைஞ்சு போனவனை நான்தான் போய்த் தூக்கி நிறுத்தித் தைரியம் சொல்லிக் கூட்டி வர்றேன்!'' — செல்லமுத்து சொல்லி முடிக்கவும் —

நாகம்மாள் பதறிக் கொண்டு சாரங்கனிடம் ஓடினாள். ''சாரங்கா இவன் சொல்றதெல்லாம்.....''

''உண்மைதாம்மா'' — அவன் வலியோடு முனுமுனுத்தான்.

அவள் செல்லமுத்துவிடம் பரிதாபமாகக் கையேந்தினாள். ''செல்லமுத்து! நான் பயந்தே போனேம்ப்பா. இப்பவும் உன்னைக் கையெடுத்துக் கும்பிடறேன். தயவு செஞ்சு என் பிள்ளையை ஒண்ணும் பண்ணிடாதே. அவன் மட்டும் அன்னிக்கு போலீஸ் தரப்பில் சாட்சி சொல்ல மறுத்திருந்தால் அவனுக்கும் உன் கதிதான் ஆகி இருக்கும். சம்பந்தமே இல்லாத ஒருத்தன் அப்படி தண்டனை அடையறதை நீ விரும்பறயா செல்லமுத்து'' — நிஜமாகவே கும்பிட்டாள்.

''இல்லே அத்தை. உங்க பிள்ளை அதுக்கு முன்னாலேயே அப்படி ஒரு தண்டனையை அனுபவிச்சாச்சு. பண்ணையார் மகளைப் போலவே இவனும் அந்த நாளில் என் தங்கச்சியை விரும்பி இருக்கான். அவளுக்காக உயிரைக் கொடுக்கவும் தயாராய் இருந்திருக்கான். ஆனால் அவள் இவனைப் பல வழியிலும் அலட்சியப் படுத்தி இருக்கா. முடிவில் பண்ணையார் மகனால் கைவிடப்பட்ட நிலையில் கூட இவன் அவளை ஏத்துக்கத்தாச் சொல்ல, அதுக்கப்புறம்தான் இவனோட உண்மையான அன்பைப் புரிஞ்சுக்கிட்டு மன்னிப்புக் கேட்டதோடு, மனசையும் உடம்பையும் இன்னொருத்தனுக்குக் கொடுத்துட்ட தனக்கு இவனைக் கணவனா அடைய எந்த யோக்கியதையுமே இல்லைன்னு சொல்லி அழுதிருக்கா. கடைசியா இவனே பாண்டியனிடம் நியாயம் கேட்கப் போக அந்தப் பாவி தன் சகாக்களை வச்சு இவனைக் கட்டிப் போட்டுச் செருப்பால் அடிச்சு விரட்டி இருக்கான். இவ்வளவும் பாண்டியனை நான் கொலை செய்த அன்று, வீட்டுக்கு ஓடி என் தங்கையின் முகத்தை ஒரு தடவை பார்த்து விட்டுப் போக நினைத்த என்னிடம், அவளே சொன்ன விவரங்கள்தான்! என்னைப் போலவே என் தங்கைக்காக இப்படி ஒரு தண்டனை அடைஞ்ச சாரங்கனுக்கு நான் மனசால் கூடக் கெடுதல் நினைக்க முடியுமா?'' — சொல்லி விட்டுக் கண்கலங்கியபடி சாரங்கனைப் பார்த்தான் செல்லமுத்து.

''உங்க ஆபீஸ்ல மூணு ஜெனரேட்டருங்க இருக்கா...? எந்த ஆபீஸ்ல நீங்க வேலை பார்க்கிறீங்க...?''

''மின்சார வாரியத்துல...!''

— சீர்காழி ஸ்ரீராம்.





"அந்தப் பத்திரிகை ஆபீஸ்ல, கிளி வளர்க்கிறாங்களே, எதுக்கு...?"

"ஜோஸ்யம் பார்த்துக்கிட்டிருந்த கிளியை இப்போ ஜோக் தேர்ந்தெடுக்கப் பயன்படுத்துறாங்களாம்!"

— கரடிகுளம் ஜெயா பாரதிப்பிரியா.



"நம்ம தலைவருக்குத் தலைகுனிவா போச்சாம்!"

"ஏன்?"

'பாமெல்லாவோடு அவரை இணைச்சி வச்சி, யாருமே இதுவரை பேசலியாம்!'

— பி.ஜி.பி. இசக்கி.



ஆசிரியர்: ம. வி. யின் தமிழாக்கம் என்னன்னு பரீட்சையில் கேட்டது தப்பாயிடுச்சு!"

அவர்: ஏன், என்னாச்சு?

ஆசிரியர்: எல்லோரும் 'ரம்பம்'னு எழுதிட்டாங்க!

— நீடாமங்கலம் ஜே. பி.



"'சும்மா வாங்க, கடிக்காது'ன்னு சொன்னீங்க... உங்க வீட்டு நாய் என்னைக் கடிச்சிடுச்சே...?"

"அதுக்காக, நாய்க்கு ஒரு பிஸ்கட் கூட வாங்கிக்கிட்டு வராம வெறுங் கையை வீசிக்கிட்டு வந்தால் எப்படி?"

— வி. கிருஷ்ணகுமார்.



"நம்ம தலைவர் அவர் பையனைக் கட்சியில் நுழைக்க முயற்சி பண்றாராம்."

"எல்லாம் நல்லதுக்குத்தான்... நம்ம தலைவரைவிட அவர் பையனைப் பார்த்தாக் கொஞ்சம் விவரமுள்ள ஆளாத் தெரியுது."

— வி. கிருஷ்ணகுமார்.

# சுகபோகத்

"**பு**யல், வெள்ளச் சேதம் என்று இயற்கையின் சீற்றத்தால் மக்கள் அவதிப்பட்டால் நம் ஆட்களுக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா, கிருஷ்ணமூர்த்தி சார்!" என்றார் கவிமன்னன் கதிரேசன்.

"சந்தோஷமா...? என்ன சொல்கிறீர்கள். மக்களில் ஒரு பகுதியினர் துன்பப்பட்டால் இதரர்களுக்கும் அது துன்பம்தானே? நாம் சகோதரர் அன்றோ?" என்றான் கிருஷ்ணமூர்த்தி, அதிர்ச்சியுடன்.

"அப்படித்தான் பாரதி பாடி இருக்கிறார். ஆனால் நிவாரண நிதியிலிருந்து சுரண்டித் தங்கள் பைகளை நிரப்பிக் கொள்பவர்கள் சந்தோஷந்தான் படுகிறார்கள். அவர்களெல்லாம் பாரதி மாதிரியா...? உள்ளும் புறமும் ஒன்றாக வாழ்ந்தவன் அல்லவா, அந்தக் கவி. பாண்டிச்சேரியில் அவன் இருந்த காலத்தில், ஒரு பெரிய புயல் சேதம் ஏற்பட்டது. மக்களுக்குக் கஞ்சி காய்ச்சி ஊற்றும் பணியில் அவன் பங்கு கொண்டிருந்ததோடு, ஓய்ந்து விடவில்லை, தெரியுமா கிருஷ்ணமூர்த்தி. ஊரில் உள்ள மரங்கள் எல்லாம் முறிந்து விழ, காக்கை முதலான பறவைச் சாதி பலவும் செத்து விழ்ந்திருந்ததாம். தெருவெல்லாம் பறவைகளின் பிணங்கள். பாரதி என்ன செய்தான் தெரியுமோ? பெரிய குழி வெட்டி, அந்தப் பறவைகளைக் கூட்டி அதில் அடக்கம் செய்தான். காக்கை குருவி எங்கள் சாதி என்று அவன் பாடியது பொய் இல்லை. சும்மா கவிதை எழுதுவதற்காக அதை அவன் எழுதவில்லை. அவன் என்ன வாழ்க்கை வாழ்ந்தானோ, அதுதான் அவன் கவிதை. அதனால்தான் அவன் மகாகவி. இன்னும் வாழ்கிறான். எங்களைப் போல, கவி மன்னன், கவி சக்கரவர்த்தி என்றெல்லாம் பட்டம் சூட்டிக் கொண்டு, ஊரை ஏமாற்றிக் கொண்டு, சினிமா இசையமைப்பாளர்களின் கார் கதவைத் திறந்து விட்டுக் கொண்டு சினிமாப் பாட்டு எழுதி ஜீவிக்கிறவர்கள், வாழ்கிற காலத்திலேயே மறக்கப்பட்டு விடுவோம். எங்களுக்கு வரலாறு ஏது?



கவிஞர் தம்மை மிகவும் நொந்து கொண்டார். அவர் நொந்து கொள்வது நியாயம் தான், என்று பட்டது கிருஷ்ணமூர்த்திக்கு. காசுக்கு நாலு வீதம், இப்போதெல்லாம் சுலபமாகக் கிடைக்கக் கூடியது இந்த மாதிரி பட்டங்கள்தானே? எம்.பில்., பி.எச்.டி., பட்டமெல்லாம் கூட ரொம்ப மலிவாகக் கிடைக்கிறதே! ஆனால் என்ன? அவ்வப்போது தம்மை நொந்து கொண்டு, எதை விமர்சிக்கிறாரோ அந்த வாழ்க்கையையே வாழ்ந்து கொண்டும் சிறுமைப்பட்டுக் கொண்டுமிருந்தார் கதிரேசன். அண்மையில் கட்சியில் வந்து சேர்ந்திருந்த மூன்றாவது கவிஞர் அவர். பேச்சை மாற்ற வேண்டும் என்று நினைத்தான் கிருஷ்ணமூர்த்தி.

"சரி. ஏதோ, நம் தலைவரின் புரட்சிக் கொள்கைகள் பால் கவரப்பட்டு இந்தக் கட்சிக்கு வருவதாக அறிக்கை கொடுத்தீர்களே, எனக்கு மட்டும் சொல்லுங்கள். இந்தக் கட்சிக்கு வந்த உண்மையான காரணம் என்ன?"

"காரணத்தை உங்களுக்கு மட்டும் சொல்கிறேன். 'பொட்டு' பத்திரிகை தெரியுமல்லவா, அதுதான் நான் முன்னே இருந்த கட்சித் தலைவரின் பத்திரிகை. அதில்தான் நான் அவ்வப்போது எழுதிக் கொண்டிருந்தேன். அந்தப் பத்திரிகையை, பாளை சங்கரன் என்பவர்தான் ஆசிரியராக இருந்து நடத்திக் கொண்டிருந்தார். தலைவரின் சொந்தப் பத்திரிகை என்பதால், சொந்தத்தோடு கவிதை கொடுத்தால், போடுவார்கள் என்கிறீர்களா? பத்து கொடுத்தால் ஒரு கவிதை போடுகிறார்கள். தலைவரிடமே போய்ச் சொன்னேன். அந்த ஆள் என்ன சொல்கிறார் தெரியுமா? 'உன் கவிதை தரமாக இருந்தால், தானே பிரசுரமாகும். என் சிபாரிசு தேவையில்லை' என்கிறார். எப்படி இருக்கு கதை?

"உடனே கட்சி மாறிவிட்டேன். ஏதோ நம் தலைவர் மாசத்துக்குப் பத்துக் கூட்டங்கள் ஏற்பாடு செய்து தருகிறார். மாசம் குறைந்தது இரண்டாயிரம் கிடைக்கிறது. பசி இல்லாமல் வாழ்க்கைச் சக்கரம் ஓடுகிறது என்று வையுங்கள்."

ஓகோ... உங்களுக்கும், உங்கள் பழைய

# தீவுகள் 21

பிரபஞ்சன்

கட்சித் தலைவருக்கும் ஏதோ தத்துவச் சிக்கல் என்றீர்களே, அதுதானா இது?''

''போங்கள், கிண்டல் பண்ணாதீர்கள்.''

கதிரேசன் கிருஷ்ணமூர்த்தியைத் தேடி வந்ததின் காரணம் வேறு. கிருஷ்ணமூர்த்திக்காக ஓர் அறிக்கை எழுதிக் கொண்டு போய், பத்திரிகை அலுவலகங்களில் அவர் கொடுக்க வேண்டும். மேலிடத்து உத்தரவோடு வந்திருந்தார் அவர்.

''சரி. அறிக்கையை எழுதட்டுமா, கிருஷ்ணமூர்த்தி?'' என்றார்.

''எழுதுங்களேன். எனக்கு ஒரு வருத்தம். எம்.ஏ. படித்து, ஏகப்பட்ட தமிழ் இலக்கியங்கள் படித்து, அழகாகப் பேசவும் எழுதவும் தெரிந்த எனக்கு, ஓர் அறிக்கை எழுதத் தெரியாது என்று மேலிடம் நினைக்கிறதே, அதை என்ன சொல்ல?''

''சேச்சே. அப்படி இல்லை கிருஷ்ணமூர்த்தி! தமிழ் இலக்கியம் வேறு. அரசியல் வேறு அல்லவா? வார்த்தைகளை வெகு ஜாக்கிரதையாகப் பொறுக்கிப் போட்டு, அறிக்கை தயாரிக்க வேண்டும் அல்லவா, அதற்காகத்தான் நான் அனுப்பி வைக்கப் பட்டேன்.

''சரி எழுதுங்கள்.''

கிருஷ்ணமூர்த்தி ஒரு பேப்பரை எடுத்துக் கொடுத்தான். கதிரேசன் தம் பையைத் திறந்து, தம் முன் கை அளவு தடியான பேனாவை எடுத்து எழுதத் தொடங்கினார். பரபரவென்று, ஏதோ மனப்பாடம் செய்த ஒரு பாடலைத் தாளில் எழுதுவது போல எழுதியது கிருஷ்ணமூர்த்திக்குக் கூட ஆச்சர்யத்தைத் தந்தது. எழுதி முடித்து அவனிடம் நீட்டினார் அவர்.

கிருஷ்ணமூர்த்தி அதை உரக்க வாசித்தான்.

'பழி ஓரிடம் பாவம் ஓரிடம்' என்று தலைப்பு எழுதியிருந்தார் அவர். தொடர்ந்து, 'தமிழகத்து நெல் விளைந்த பூமியைத் தரிசாக்கி, அந்நியக் கம்பெனி ஒன்றுக்கு நான் விற்றுப் பணம் பண்ணிக் கொண்டதாக, எதிர்க் கட்சித் தலைவர் பேசிக் கொண்டிருப்பதைத் தமிழர் அறிவர். அதோடு, எதிர்க் கட்சித் தலைவர் லஞ்ச லாவண்யத்தில் ஊறித் திளைத்த லஞ்ச ஊழல் திலகம் என்பதையும் மக்கள் அறிவார்கள். அரசியல் வானில், ஒரு புதிய தாரகை போல நான் உருவாகி வருவது அந்த மனிதருக்குத் தாங்கிக் கொள்ள முடிய வில்லை என்பதே உண்மை. என் மீது சேற்றை வாரி வீசியிருக்கிறார். மடியில் கனம் இருந்தால்தானே வழியில் பயம்? என் அரசியல் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகம். யார் வேண்டுமானாலும் அதைப் புரட்டிப் பார்க்கலாம். மதுரை மாவட்டத்துச் சந்தனக் காடுகளை ரகசியமாக அழித்துச் சந்தன மரங்களை விற்று ஏராளமாகப் பணம் பண்ணிக் கொண்டேனாம். சந்தனத்தால் ஆன பொருட்களை அங்காடிகளில் பார்த்திருக்கிறேனே தவிர, சந்தனக் காடுகளை நான் பார்த்ததே இல்லை. மதுரை மாவட்டச் செயலாளர் திரு. தெய்வ நாயகம் அவர்கள் மேற்படி நிலச் சொந்தக்காரர்கள் பலரிடம் உறவு வைத்துக் கொண்டதும், கொஞ்ச காலம் மர விற்பனை செய்ததும் உண்மை. அவர் என் உறவினர். உறவு, தாய் வழியில் வந்த ஒன்று. அது அரசியல் வழிப் பட்டது அல்ல! சி.பி.ஐ. இந்த ஊழலை விசாரிக்கப் போகிறதாம். உடன் விசாரிக்க வேண்டும் என்றே பிரதமரை நான் கேட்டுக் கொள்கிறேன். குற்றவாளிகள் யாராக இருந்தாலும், அவர்களைத் தூக்கில் ஏற்றுங்கள். இதுவே என் கோரிக்கை. சூரியனைத் தன் உள்ளங் கையால் மறைக்கப் பார்க்கிறார்கள் என் அரசியல் எதிரிகள்! காலம் அந்தக் கோமாளிகளுக்குப் பதில் சொல்லத் தான் போகிறது. சத்தியமே வெல்லும். மகாகவி பாரதி சொன்னது போல, தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும். தருமம் மறுபடியும் வெல்லும் என்று கூறித் தமிழக மக்களின் தாள் வணங்கி முடிக்கிறேன்..''

படித்து முடித்து விட்டுக் கிருஷ்ணமூர்த்தி





"குடும்பக் கட்டுப்பாடு அதிகாரியின் கல்யாணத்தில் என்ன கலாட்டா?"

"தாலியில் இரண்டு முடிச்சுத்தான் போடுவாராம்!"

— நாகை பாபு.

சொன்னான்.

"நன்றாக எழுதியிருக்கிறீர்கள். ஒரே ஒரு பிரச்னை."

"என்ன?"

"அனாவசியமாக மாமாவைக் காட்டிக் கொடுப்பது மாதிரி இரண்டு வரிகள் வருகின்றனவே, அதுதான் எனக்குப் பிடிக்கவில்லை."

"உங்களுக்கு மகாபாரதக் கதை தெரியும் என்று நினைக்கிறேன். பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் போர் தொடங்க இருக்கிறது. சாமுத்ரிகா லட்சணம் அனைத்தும் அமைந்த சுத்த வீரன் ஒருவனைக் களப் பலியாக யார் கொடுக்கிறார்களோ, அந்தப் பக்கத்துக்கு ஜெயம் உண்டாகும் என்று தெரிகிறது. பாண்டவர்கள் அரவானைப் பலி கொடுக்கிறார்கள். சுத்த வீரன் அவன். அது மாதிரி, யாரேனும் ஒருத்தர் ஒரு காரியத்துக்குப் பொறுப்பு எடுத்துக்க வேண்டாமா? தெய்வ நாயகம் அந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்ளட்டுமே... நில ஊழல், சந்தன மர ஊழல் என்று பெரிய பட்டியலையே கையில் வைத்துக் கொண்டு, 'இதுக்கு என்னய்யா சொல்றீங்க' நம் முதலமைச்சரைப் பார்த்துப் பிரதமர் கேட்கிறார். நம் தலைவர் வேறு என்னதான் பண்ணுவார். 'சி.பி.ஐ. அதை விசாரிக்கட்டும்' என்று பதில் சொல்லி விட்டு வந்து விட்டார். சி.பி.ஐ. உள்ளே நுழைந்தால், என்ன என்ன விவகாரமோ வெளியே வரும். ஒரு வடமொழிச் சுலோகம் தெரியுமா உங்களுக்கு? 'ஒரு குடும்பம் வாழணும்னா, அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு நபரைப் பலி கொடுக்கலாம். ஒரு நாடு வாழணும்னா, ஒரு நகரத்தையே பலி கொடுக்கலாம்' என்கிறது அந்தச் சுலோகம்."

"இதில் சம்பந்தப்பட்டிருப்பது மாமா மட்டுமல்ல! கோகிலாவும், நானும். இன்னும் சில எம்.எல்.ஏ.க்களும்."

"இத்தனை பேர் பாதிக்கப்படறதுக்குப் பதிலா, ஒரே ஒரு தெய்வ நாயகம் பாதிக்கப்பட்டால், அது தவறு ஆகாதே....!"

"துரோகம் என்று மக்கள் பேசுவார்களே என்றுதான் கவலை."

"மக்களுக்கு வேறு வேலை நிறைய இருக்கு, கிருஷ்ணமூர்த்தி. அவ்வப்போது நாம் ஏதாவது பிரகாசமான வித்தை காட்டி, அவர்களை நம்மோடவே வைத்துக்கொள்ள வேண்டும். அடிக்கடி கண்டன ஊர்வலம், மாநாடு, உண்ணாவிரதம், நாடு தழுவிய போராட்ட வாரம் என்றெல்லாம் வித்தைகள் பட்டியல் நீள வேண்டும். மக்கள் சந்தோஷப்பட்டு விடுவார்கள். மக்களுக்கும் குழந்தைகளுக்கும் என்ன வித்தியாசம்....?"

"இல்லைதான். கோகிலாவைக் கூட மேலிடம் ஓரம் கட்டுகிறதே, பார்த்தீர்களா?"

"பார்த்தேன். அது ஒரு ஸ்டண்ட். நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். 'கட்சியில் நான் எதையும் செய்ய முடியும். செய்வேன். எவர் தலையையும் என்னால் சீவ முடியும். எவர் தலைக்கும் கிரீடம் சூட்ட முடியும்' என்று முதல்வர் தம் கட்சிக்கும் நாட்டு மக்களுக்கும் சொல்ல வேண்டியிருக்கிறது, அடிக்கடி. அதோடு, தான் பெண் சபலம் அற்றவர் என்றும் நிரூபிக்க வேண்டியிருக்கிறது. அதனால்தான், மேலிடம் கொஞ்ச நாளைக்கு அந்த அம்மையாரைத் தூக்கி மேலே வைக்கும். அதுவே அவரைத் தூக்கிக் கீழே போடும். இதெல்லாம்தான் நம் காலத்து அரசியல்."

கவிமன்னன் கதிரேசன் புறப்பட்டார்.

"அயோக்கியப் பயலுக... இப்ப இந்த அறிக்கையை எடுத்துக்கிட்டுத் தலைவரைப் பார்க்கணும். அவர் அனுமதியோட, எல்லாப் பத்திரிகை ஆபீசுக்கும் போகணும். யார் யாரையோ கெஞ்சணும். சரியா அடுத்த மூணு நாளைக்கு வேலை இருக்கு. செலவுக்கு இரண்டாயிரம் ரூபாய் தர்றான், ஆபீசிலே! அந்த அம்மா, கோடம்பாக்கத்துல கூட்டம் பேச வந்தா, சீரியல் லைட்டுக்கும், டியூப் லைட்டுக்கும், மேடை அலங்காரத்துக்கும் மட்டுமே லட்சம் லட்சமாக் கொண்டு போய்க் கொட்டறான். உழைப்புக்கும், நேர்மைக்கும் எந்தக் கட்சியிலேயும் மரியாதை இல்லைன்னு ஆயிட்டுது..."

"இதைக் காரணமாக வைத்துக் கட்சி மாறிவிடாதீரும்...."

"ஊஹூம்... மேலும் போறதுக்கு வேற எந்தக் கட்சியும் இல்லையே..."

கவிமன்னன் போர்வையை ஒழுங்கு செய்து கொண்டு சென்றார்.

டெலிபோன் மணி சீராக அழைத்துக் கொண்டே இருந்தது, கிருஷ்ணமூர்த்தியை. விழித்துக் கொண்டான் அவன். ரிசீவரை எடுத்துச் சோம்பலுடன் காதில் வைத்துக் கொண்டு, மணியைப் பார்த்தான். மணி நாலரைக்கு மேல்.

"நான் கோகிலா பேசறேன்."

"சொல்லுங்கள்."

"டில்லி போகிறேன்."

"என்ன, ஏதாவது வேலையா?"

"ஏர்—போர்ட்டுக்கு வா சொல்றேன்."

கோகிலா துண்டித்துக் கொண்டது தெரிந்தது.

அடுத்த ஐந்தாவது நிமிடம் அவன் தன் காரில் விமான நிலையத்துக்கு விரைந்து கொண்டிருந்தான்.

(தொடரும்)

நடந்து கொண்டே சிரிக்கின்றேன்!

# 'புல்வேர்' ஜனநாயகம்!

— மெரீனா

கடந்த நாற்பது வருடங்களுக்கு மேலாக நாம் அரைகுறை ஜனநாயக நாடாகத்தான் இருந்திருக்கிறோம். ஆயிரம் ஆண்டுகளாக நம் நாட்டு கிராமங்களில் பஞ்சாயத்து முறை இருந்து வந்தாலும், அது பஞ்சாயத்து ராஜ் ஆக மாறா விட்டால், நம் நாட்டில் ஜனநாயகம் வேர் ஊன்றி விட்டதாகச் சொல்ல முடியாது. இதற்குத் தான் 'புல்வேர்' (grass root) ஜனநாயகம் என்று பெயர். இதைத் திடீரென்று கண்டு பிடித்து நமக்குச் சொன்னவர் யார் தெரியுமா? உலகின் தலைசிறந்த ஜனநாயகவாதியாகத் திகழ்ந்த ஜவஹர்லால் நேருவின் சாட்சாத் பேரப் பிள்ளை. ஜவஹர் வேலை வாய்ப்புத் திட்டத்தை அறிமுகப்படுத்தி, கிராமப்புறங்களில் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்து விட கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் நம் பிரதமர். போதி மரத் தடியில் அமராமலேயே, அவருக்கு இப்படியொரு ஜனநாயகோதயம் ஏற்பட்டு, தினமும் அதை டீ.வி.யின் மூலம் எனக்கு எடுத்துச் சொன்ன பிறகுதான் என் மர மண்டையில் ஏற ஆரம்பித்தது!

நகர்ப்புறங்களில் மட்டுமே திரிந்து கொண்டிருக்கும் நம் ஜனநாயகத்தைக் கையும் களவுமாகப் பிடித்து, என் கண் முன்னே நிறுத்தி, 'வரப் போகும் தேர்தலில் உன் ஆதரவு இருந்தால் இதைக் கிராமப் புற மக்களின், முக்கியமாக ஷெட்யூல் வகுப்பினர், பழங்குடி மக்கள், அதிலும் பெண்கள் கையில் ஒப்படைப்பேன்' என்று வீர சபதம் செய்து கொடுக்கிறார். நாற்பது வருடங்களாக, கோடிக்கணக்கான இந்தியக் குடிமக்களில், 5000 பேர்தான் நாடாளுமன்றத்திலும், சட்ட மன்றங்களிலும், மாநகராட்சி, ஊராட்சி மன்றங்களிலும் ஜனநாயகக் காவலர்களாக இருந்து வருகிறார்கள். குறைந்தது ஒரு லட்சம் பேராவது 'வாட்ச்மேன்'களாகப் பணிபுரியத் தொடங்கினால்தான் நம் ஜனநாயக செல்வத்தைக் காப்பாற்ற முடியும் என்று அவர் சொல்கிற போது, என்னை நம்பாமல் இருக்கச் சொல்கிறீர்களா?

இன்னொன்றும் டீ.வி. புகழ் பிரதமரிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன். நம் நாட்டில் வேகமாகப் பரவி வரும் லஞ்ச



# பரிசு: கலர் டி.வி!



கல்கியின் டி. வி. வீடியோ பக்கங்களுக்கு, டி. வி. அல்லது வீடியோ தொடர்பான சிரிப்பு ஜட்டங்களை எழுதி அனுப்புங்கள். அனுபவமோ, விமர்சனமோ சுருக்கமாக இருக்க வேண்டும்; (கல்கியில் ¼ பக்க அளவு) கட்டாயம் சிரிக்க வைக்க வேண்டும். மிகச் சமீபத்திய கல்கி இதழின் தலையங்கப் பக்கத்தில் உள்ள தேதிப் பகுதியை மட்டும் — மூன்று வரிகள் — நீங்கள் எழுதும் துணுக்கு அல்லது விமர்சனத்துக்கு மேல்புறம் ஒட்டி அனுப்புங்கள்.

பிரசுரமானால் ரூ. 25/— பரிசு. தவிர பிரசுரமாகும் அனைத்துக்கும் வரிசை எண் தரப்பட்டு, இன்னும் மூன்று மாதங்கள் சென்றதும் குலுக்கல் முறையில் ஒருவருக்குக் கலர் டி. வி. பரிசு வழங்கப்படும்!

ஊழல்களை விரட்ட ஒரே வழி, நம் ஜனநாயகத்தைக் கிராமப் புறங்களில் புழங்க விட்டு, மூலை முடுக்குகளிலெல்லாம் அது குடிபுகும்படி செய்வதுதான்; இதன் மூலம்தான் பதவியதிகாரத்தை விலை பேசும் அரசியல் தரகர்களைப் பூண்டோடு ஒழித்துக் கட்ட முடியும் என்று பிரதமர் எனக்கு உணர்த்தியிருக்கிறார். அதை அப்படியே நம்பாமல், பெரிய புத்திசாலி என்று என்னை நினைத்துக் கொண்டு, 5000 'வாட்ச்மேன்'கள் இருக்கும்போதே, கோடி கோடியாக ஊழல்கள் நடக்கிறதே, லட்சம் பேர் நியமிக்கப்பட்டால் நம் நாடு தாங்குமா என்று மடத்தனமாகக் கற்பனை செய்யத் தொடங்கி விட்டேன். நபர்கள் அதிகமானால் ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் பங்கு வேண்டுமானால் குறையலாமே தவிர, ஊழல் குறைந்து விடும் என்று எப்படிக் கூறுகிறார் என்பது மட்டும் பொருளாதார அறிவு லவலேசமும் இல்லாத எனக்கு இந்தக் கணம் வரை புரியவில்லை.

ஆனால் ஒன்று, நம் பிரதமர் என்னதான் முயன்றாலும், நாம் அவருக்கு எத்தனை ஆதரவு கொடுத்தாலும், ஜனநாயகம் கிராமப்புறங்களில் ஊர்வலம் வரக் குறைந்தது இரண்டு வருடங்கள் ஆகும் என்று தெரிகிறது. பிரதமர் நாடாளுமன்றத்தில் கொண்டு வந்துள்ள பஞ்சாயத்து ராஜ் சட்ட திருத்த மசோதா, மக்கள் சபை அடுத்தக் கூட்டத் தொடரில் பாஸாகி, ராஜ்ய சபா பெரியவர்கள் 'ததாஸ்து' சொல்லி, சட்ட மன்றங்களும் அங்கீகரித்து, 'குடியரசுத் தலைவர் முத்திரை பதிக்க, கிராமத்துக்குப் போ' என்று ஜனநாயகத்துக்குப் பச்சைக் காட்டுவதற்குள் 1992 வந்து விடும் என்று அனுபவப்பட்டவர்கள் கூறுகிறார்கள். ஆனால் 1992ல் கூட நாம் அடித்தள ஜனநாயகவாதிகள் ஆவோமா?

என் சந்தேகத்திற்கான காரணத்தைச் சொல்லி விடுகிறேன். வரப் போகும் நாடாளுமன்றப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் (ஐ) வெற்றி பெற்று விட்டால் 'பஞ்சாயத்து ராஜ் பெயரைச் சொல்லி எப்படியோ ஜெயித்து விட்டோம். இனிமேல் இந்த 'சுலோகன்' எதற்கு? வேறு ஒன்றைப் பிடித்துக் கொள்வோம்' என்று ஜனநாயகத்தின் கிராமப்புற பயணத் திட்டத்தை 'அம்போ' என்று விட்டு விடலாம். ஒரு வேளை எதிர்க் கட்சி கூட்டணி வெற்றி பெற்றாலோ, காங்கிரஸ் கட்சியின் வாக்குறுதியை அவர்கள் குப்பைத் தொட்டியில் தானே தூக்கிப் போடுவார்கள்...!

மானேஜர்: ஆபீஸா இது...? காலையில் உங்க இஷ்டத்துக்கு வர்றீங்க...! ஃபேனைப் போட்டுக்கிறீங்க...! காலைத் தூக்கி மேஜைமேல் போட்டுக்கிட்டுத் தூங்க ஆரம்பிக்கிறீங்க...! சாயந்திரமானா எழுந்து போயிடறீங்க...! என்னய்யா நினைச்சுக்கிட்டிருக்கீங்க எல்லாரும்...?

ஊழியர்: சார் வந்து...!

மானேஜர்: என்னய்யா, வந்து போயி... போகும் போது ஃபேனை ஆஃப் பண்ணிட்டுப் போனா என்னய்யா?

— சிவாஜி கிருஷ்ணா.



## அத்தியாயம் 7
## "புதிய வெளிச்சம்!"

# என் உயிர்த் தோழன்

'பவளக்கொடி' ராஜகுமாரிக்கு அங்கே நடந்த வாக்குவாதம் அச்சத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தது. தன் 'மானசிக மணாளன்' ராஜபார்ட் 'வித்தை'துரைய்யா தனக்கு இணையில்லாத ஒருவனோடு ஏன் இப்படி விவாதித்துக் கொண்டிருக்கிறார் என்று யோசிக்க ஆரம்பித்தாள்.

விட்டால் மேடையை யுத்தகளமாக்கி விடுவதுபோல் தென்னவன் பேசிக் கொண்டிருந்தான். அந்த இளங்காளை பயமறியாமல் பாய்ந்து கொண்டிருந்தது.

அமைதி இழந்த தமிழ்முரசு உள்ளே வந்து சேர்ந்தார்.

ஊர்ப் பெரியவர் வந்துவிட்ட அதிர்ச்சியில் அங்கே ஒரு சின்ன அமைதிக்கான சூழ்நிலை உருவாகி இருந்தது.

ராஜபார்ட் பெருமூச்சுகளைக் கட்டுப் படுத்த முடியாமல் அப்படியே இருந்தார். தென்னவன் ஓர் ஓரமாக நின்றான்.

"நாடகப் பெரியோரே! தங்களுக்குள் என்ன விஷயம், விவகாரம்...! பார்த்துக் களிக்க எம்மவர் வெளியே காத்திருக்க, தங்களுக்குள் என்ன தீர்த்து வைக்க முடியாத அளவுக்குப் பிரச்னை...! சொல்லுங்கள்!"

ராஜபார்ட் உறுமலுடன் தென்னவனைப் பார்த்தார். தென்னவன் கழுத்திலிருந்த கர்ச்சீப்பை எடுத்து முகத்தைத் துடைத்துக் கொண்டு மறுபடி அதே இடத்தில் வைத்துக் கொண்டான்.

தமிழ்முரசு அந்த இடத்தை — அவர்களை — 'சர்வே' செய்வதுபோல் சுற்றிப் பார்த்தார். ஸ்திரீபார்ட் வெட்கப்பட்டாள்.

துணை நடிகர்கள் 'சிரிக்காத' ரங்கநாதனுக்கும், 'கழி' வெங்கடாசலத்திற்கும் என்ன நடக்கிறது என்றே புரியவில்லை.

'வந்தமா... வேஷம் போட்டமா... நாடகத்தை முடிச்சமான்னு இல்லாம இது என்ன வீண் விவகாரம்?' அவர்களுக்குள் சிந்தனை ஓடியது.

தமிழ்முரசு எல்லோரையும் இந்த முறை அன்புடன் பார்த்தார்.

வெளியே சத்தம் கூடிக் கொண்டே இருந்தது. மக்கள் பொறுமை இழந்து கொண்டிருப்பதை அந்தச் சத்தம் அவசரமாக உணர்த்திக் கொண்டிருந்தது. சிட்டு, கூட்டத்தினரைத் திரும்பிப் பார்த்துவிட்டு மேடையில் தேடினான். யாரும் தென்படவில்லை.

தமிழ்முரசு தென்னவனைக் கூப்பிட்டு அவன் மீது கைபோட்டுக் கொண்டு "என்ன நடந்தது, சீக்கிரம் சொல்லு" எனக் கேட்டார். அவன் தயங்கினான்.

ராஜபார்ட் பொழிந்து தள்ளினார்.

"நான் ஐந்தரை கட்டையில பாடுவேன்னு சொல்றதுக்கு இவன் யாருங்க...? நீங்களே சொல்லுங்க! உடம்புல வேஷம் போட்ட நாள்ல இருந்து இன்னிய வரைக்கும் தொழிலை ஒரு தோஷமில்லாம நடத்திக் காட்டி இருக்கேன்! அதுல பேரும் வாங்கி இருக்கேன்! நேத்திக்கு வந்த சின்னப் பய என்னைச் சீண்டிப் பார்க்கிறான்! அவனவனை வைக்கிற எடத்துல வைக்காம விட்டதே தப்பு!"

தென்னவனுக்குச் சுரணை குத்த ஆரம்பித்தது.

அவன் கண்கள் வீரியத்துடன் ராஜபார்ட்டைப் பார்த்தன.

"டேய்... போய் நீ பாடுடா... பார்க்கறேன்... சும்மா பேச்சுக்குச் சொன்னேன்னு சொன்னே இல்லே...! நானும் பேச்சுக்குத்தான் சொல்றேன். ஐந்தரை கட்டையில பாடுடா! போய்ப் பாடு..." ராஜபார்ட் ஆவேசப்பட.

தென்னவன் சவாலை எப்படிச் சமாளிக்கப் போகிறானோ என்பது போல் தமிழ்முரசு அவனைப் பார்த்தார்.

"அப்பா...! உங்க மேலே சத்தியமா, நான் பார்க்கிற தொழில் மேல சத்தியமாச் சொல்றேன்... தண்ணியில ஊறின மட்டை மாதிரி உங்க கூட இருந்தே என் மனசுலயும் உங்க சுருதி, பாட்டு, நடை, உடை, பாவனை எல்லாத்தையும் ஏத்திக்கிட்டேன்! இதை இறக்க வாய்ப்புக் கிடைக்கலையேன்னு தான் ஏங்கிக்கிட்டிருந்தேன்! இப்ப கெடைச்சிருக்கு... உடுப்பக் குடுங்க, வேஷத்தைப் போடச் சொல்லுங்க... அப்புறம் ஜனங்களோட கைதட்டலைப் பார்த்துட்டு என்

பாரதிராஜா

தோள்ல ஒரு தட்டுத் தட்டினீங்கன்னா போதும்...

தென்னவனின் வார்த்தைகளில் நம்பிக்கை உறைந்து இருந்தது.

தமிழ்முரசு கைதட்டினார். அவர் கண்கள் கலங்கி இருந்தன.

வெளியேயும் கைதட்டல் சத்தம்.

அன்று அந்த மேடை 'புதிய வெளிச்சத்தை'ச் சந்தித்தது.

சிட்டு அகலக் கண்விழித்து, அப்படியே மேடையைப் பெயர்த்துத் தன் கண்களுக்குள் அடக்கம் செய்துவிடுவது போல் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கம்பீரமாய் ஒரு சூரியனைப் போல மேடைக்கு வந்தான் தென்னவன்.

லட்சணமான உருவம் — பொருத்தமான ராஜபார்ட் வேஷம். லாகவமாய் நடை போட்ட விதம். நளினம் மெல்லப் பரவியது.

திடீரென்று மாஜியான ராஜபார்ட், தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்டு உள்ளிருந்தபடியே பார்க்க ஆரம்பித்தார். தென்னவனை உடனே அங்கீகரித்துவிட்டது போல் கூட்டம் கைதட்டியது.

அபிநயித்துச் சுழன்று நின்று ஜனங்களைக் கைகூப்பி வணங்கி, அனுபல்லவியை ஆரம்பித்தான்.

'தமிழ் கலைத் தெய்வமே,
தத்துவமிகும் தவமே!
அமுத மயமே!
எங்கள் அரசி சரஸ்வதியே....'

கல்யாணி ராகமும் ஆதி தாளமும் அவனை ஆட்சி செலுத்தியது. முழு த்வனியுடன் பாடிக் கொண்டிருந்தான்.

'சமத்துவ சங்கீத ராணி,
சகலலோக நாயகி கல்யாணி
சமத்துவ சங்கீத ராணி!

இயல் இசை நாடகம்
இயம்பும் மனோகரி,
இதய பராபர...
எனக்கருள்வாய் நீயே...!
உனைத் துதித்தேன் அம்பா...
என் மனம் நோக,
எனக்கும் உன் வரம் தா,
தாமதம் ஏன் தாயே!'



வீதியில் பேச்சாய் இருந்து மேடையில் பாட்டாய் ஆகி இருந்தான் தென்னவன். குரல் ஒற்றுமையில் அவனைப் புரிந்து கொண்டு குளிர் நிலவினைப் பார்ப்பது போல் அவனை அறிந்து மகிழ்ந்தாள் சிட்டு.

அவனை முழுமையாக — எந்த இடத்திலும் தன் பார்வையிலிருந்து நழுவ விடாமல் — பார்த்துக் கொண்டே இருந்தாள்.

அப்பாவோ, உள்ளே போய் மத்தியஸ்தம் செய்து விட்டு வந்ததைச் சிட்டுவுக்கு, அவள் கேட்காமலேயே சொல்லிக் கொண்டிருந்தார். 'தென்னவன் தம் சிஷ்யன்' என்பது போல் அவர் பேச்சில் ஒரு பாவனை வேறு தொனித்தது! அவன் குரலும் அபிநயமும் மேடையில் அவன் சுழற்சியும், உடை அலங்காரமும், மக்களைப் பார்த்துச் செய்த புன்னகையும் அவனுக்குச் சொகுசான சுகத்தை ஏற்படுத்தி இருந்தன. இவற்றால் அவள் பாதிக்கப்பட்டிருந்தாள்.

சிட்டுவைச் சுட்டு வீழ்த்தி இருந்தன, அவன் பார்வையும், பல்லவியும்...

தமிழ்முரசு பலமுறை வெற்றிலை கேட்டும் அவள் கவனிக்கவில்லை.

மகள் ரசிப்பதில் ஆழ்ந்திருப்பதால், தமக்கு வெற்றிலை தருவதில் தடுமாறுகிறாள்



என்று தமிழ்முரசு புரிந்து கொண்டார். ஸ்திரீபார்ட் ராஜகுமாரி இன்னும் மேடைக்கு வராதது அவருக்குக் கஷ்டமாக இருந்தது.

தென்னவனின் ஆதிக்கம் சந்தனத் தேவன் பட்டியில் பரவி, பற்றிக் கொண் டது.

ஊரின் 'நில வாழ்த்துப்பா'ப்போல அவன் பாடல் ஒலிக்க ஆரம்பித்தது.

ஏற்றம் இறைத்துக் கொண்டே ஒருவன் தன் சகதர்மிணியைப் பார்த்துப் பாடி னான்:

''சமத்துவ சங்கீதராணி
சகலலோக நாயகி கல்யாணி...''

சரியான கல்யாணி தெரியாததால் அவன் கிராமிய ராகத்தில் தன் வசதிக்குத் தக்கபடி மாற்றிக் கொண்டு பாடினான்.

அவன் சகதர்மிணி கூச்சப்பட்டாள்.

''அடியே அஞ்சலை... உன்னைக் கல் யாணம் கட்டிப் பதினாறு வருஷம் ஆச்சு...! 'நீயும் என்னிக்காவது வெக்கப்படுவேன்னு' பாத்தேன்! இன்னிக்குத்தாண்டி அது நடந் திருக்கு... அடியே என் ராணி...!''

''சமத்துவ சங்கீத ராணி!'' என மறுபடி

யும் பாட ஆரம்பித்தான்!

**தெ**ன்னவன்போல்நடந்துவயல்வெளி யில் ஒருவன் நாத்து நட ஆசைப்பட்டுக் குத்த கைக்காரரிடம் வாங்கிக் கட்டிக் கொண் டான்.

''எலேய்... நாத்தைமிதிச்சிப்போட்டு என் னடா பாட்டு! பாட்றதுன்னா ஊருக்கு வெளிய இருக்கிற சுடுகாட்டுல போயி பாடு! பொணங்கிணம் கூடப் பாடும். ஆட்டம் போடும். போடா...!''

இப்படி தென்னவனின் பாடல் கிராமத் தின் 'நேயர் விருப்பம்' போல ஆகி இருந் தது. அவர்கள் ரசித்தனர். பாடினர். ஆடி னர்.

**பா**ட்டோடு தென்னவன் பேச்சும் சிட்டுவின் மனத்துக்குள் மௌன ஆதிக்கம் நடத்தியது. மனம் அந்தக் குரலையே நாடி யது.

'தென்னவன்... தென்னவன்... தென்ன... வன்...' அவள் உதடுகள் ஒரு முறையும், மனம் பல முறையும் சொல்லிப் பார்த்துச் 'சங்கீத பரிவர்த்தனை' செய்து கொண்டன.

அதே மேடையில் அவன் பாடிய இன் னொரு பாடலும் அவளைத் திரும்பிப் பாட வைத்தது.

'வள்ளுவமெனும் மலர்ச் சோலையிலே
நல்அறிவெனும் தென்றல் வீசிடுதே...
குறளின் மணம் நாடும்,
குயிலும் இசை பாடும்
கோலமாமயில்கள் ஆடும் இசையோடு.

சுவைத் தேனை உண்டு,
சுருதி மீட்டும் வண்டு,
சோபித இதழ் கண்டு,
ஆடும் மான்களும் உண்டு!
தேனருவி சுழன்று
செப்பிடும் வள்ளுவன்
ஒப்பற்றதனைப் புகழ்ந்து
இனி தமிழன் இசைக்குரல்
இனித்திடுதே.....'

சிட்டுவுக்குள் ஓடிய 'கனவு பயாஸ்கோப் பில்' தென்னவன் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தான். அவன் வீசி எறிந்த புல் லாங்குழல் தன்னிடம் தஞ்சமடைந்ததைப் போல் அவள் உணர்ந்தாள். அதைத்தொட்ட உடனே இசை வந்தது. துவாரங்களில் விரல் பட்ட உடனே உயிர் வந்தது.

**கி**ராமத்தில் அந்த ஒரு நாளில் தென் னவனுக்கென ஒரு கூட்டமே உருவாகி விட்டது. ராஜபார்ட்டின் சவாலை ஏற்று வெற்றி பெற்றதில் அவனுக்கு சந்தோஷம்.

அதோடு ராஜபார்ட் தோளில் தட்டிப் பாராட்டியதில் ஏற்பட்ட நெகிழ்ச்சி. எல் லாம் சேர்ந்து அவனுக்குப் புத்துணர்ச்சியை ஏற்படுத்தி இருந்தன.

''ஒருத்தனுடைய அப்போதைய நிலைமையை வைச்சு 'அவன் இப்படித்தான்'னு முடிவு பண்ணிடறது மடத்தனம்! அவன் மனசு ஒரு லட்சியத்தை நோக்கி இயங்கிக்கிட்டிருக்கும் போது அவன் மத்த முட்டுக்கட்டைகள் எல் லாத்தையும் சாதாரணமாத்தான் நினைப் பான். நினைச்ச குறிக்கோளை அடையற வரைக்கும் அவன் உறக்கமில்லாம உழைச் சுக்கிட்டுத்தான் இருப்பான்... தென்னவா... நீ விஷயம் உள்ளவன் மட்டுமில்லை... அதை நேரம் பார்த்து நிலைநாட்டி ஜெயிக்கத் தெரிஞ்சவனும் கூட...!''

— ராஜபார்ட்டின் வார்த்தைகள் தென் னவனை மிகவும் பெருமைப்படுத்தி இருந் தன.

அந்த ஆனந்தத்துடன் காலை ஆற்றங் கரைக்குத் தென்னவன் வந்த போது நான்கு சிறுவர்கள் அவனை வரவேற்றனர். விசா ரித்தனர். ''சமத்துவ சங்கீத ராணி! — ஒன்ஸ் மோர்'' கேட்டனர். அவர்களும்தோராயமாய் அவனுடன் சேர்ந்து பாடினர்.

சிறுவர்களை அனுப்பிவிட்டுக் குளிக்க நீரில் இறங்கினான் தென்னவன். முதலில் பல் துலக்க வேண்டாமா?

கம்பெனி பல்பொடி ஒருவிதமான கலரில் இருந்தது. டப்பாவைத் தட்டிக் கையில் கொட்டினான். அதைவிநோதமாக ஒருமுறை பார்த்துவிட்டு விரலால் ஒத்தி எடுத்து வாய்க்குக் கொண்டு போனான்.

''நிறுத்துங்க!''

கோரஸ் குரல் வந்த திசையை நோக்கித் திரும்பினான்.

அதே சிறுவர்கள்! ராணுவ அணிவகுப்பு போல அடி எடுத்து அவனை நோக்கி வந்தனர். அவனை உற்றுப் பார்த்தனர். ஒருவன் கையிலிருந்த பல்பொடியைத் தட்டி விட்டான். அது காற்றில் பறந்து கலந்தது. ஒருவன் விரலைத் துடைத்தான். ஒருவன் சிரித்தான். ஒருவன் கையிலிருந்த ஆல மரத்துக் குச்சியை அவன் கையில் திணித் தான். ''இதால பல்லை விளக்குங்க!'' என் பது போல் சைகை காட்டினான்.

தென்னவன் அவர்களை விசாரித்தான்.

''இது யார் ஐடியா? நீங்களா கொண்டு வந்தீங்களா? இல்லே, வேற யாராவது சொல்லி ஓடிச்சிக்கிட்டு வந்தீங்களா?''

மௌனம்...

''சொல்லுங்கடா...! இந்தக் குச்சியா லேயே உங்க வாயை நோண்டிடுவேன்! 'பல்லுக் குச்சி சொந்த புத்தியா...?' சொல்லி வந்த புத்தியா...?''

அதே மௌனம்.

குச்சியை உடைக்கப் போனான். அவர்கள் த டு த் த ன ர். பின் அவர்கள் வலது பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டுச் சட் டென அவனிடம் திரும்பி அதே கோரஸ் குரலில் ரகசியமாக(!)க் கத்தினர்:

''சொல்லக் கூடாதுன்னு உத்தரவு...!''

(தொடரும்)



''மன்னா! ராணுவ வீரர்களுக்குப் பல மாடிக் கட்டடங்களில் குடியிருப்புக்கள் ஒதுக்கியது தப்பு!''
''ஏன், அமைச்சரே?''
''எல்லோரும் 'ஹில் அலவன்ஸ்' கேட்கிறார்கள்!''

— புதூர் முருகன்.

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008



Nestlé

**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

# சித்தர்களை ஆராய்ந்த வித்தகர்!



"சித்தர் இலக்கியம்" என்ற ஆய்வு நூல், டாக்டர் பட்டம் பெறுவதற்காக எழுதப்பட்டதல்ல. அதனால்தானோ என்னவோ, படிக்க மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது! சுவாரஸ்யமான முறையில் எழுதப்பட்ட ஆராய்ச்சி நூல்களின் ஆசிரியர்களுக்கு டாக்டர் பட்டம் வழங்கக் கூடாது என்று ஏதேனும் விதி முறை இருந்தால் சரி; இல்லையெனில் இந்த நூலின் மூன்று பாகங்களுக்காக மூன்று டாக்டர் பட்டங்களை ஆசிரியர் மீ.ப. சோமுவுக்குத் தாராளமாக வழங்கலாம்!

சித்தர் பாடல்கள் என்பன, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவையும் உள்ளன; சமீப காலத்தவையும் இருக்கின்றன. இவற்றையெல்லாம் பழைய புத்தகங்களிலிருந்தும் ஓலைச் சுவடிகளிலிருந்தும் தேடிக் கண்டுபிடித்துத் தொகுத்துத் தருவதே ஒரு பெரிய காரியம். ஆனால் சோமு இத்துடன் திருப்தி அடைந்து விடவில்லை. இவற்றை ஆய்வு செய்து, உள்ளே பொதிந்து கிடக்கும் தத்துவங்களை விளக்கியிருக்கிறார். தத்துவம் என்றதுமே நாம் பயந்து ஓடிவிடாத படிக்கு அவற்றைஎளிமைப்படுத்தி, சுவைபட விளக்கியிருக்கிறார். அதனால்தான் படிப்பதற்கு மிகவும் சுவாரஸ்யமான நூல்களாக மூன்று பாகங்களும் விளங்குகின்றன.

சித்தர் இலக்கியத்தில் நாம் அடிக்கடி கேள்விப்படுகிற திருமூலர், ஔவையார், பட்டினத்தடிகள், கருவூர்த்தேவர், காரைக்கால் அம்மையார், சிவவாக்கியர், குதம்பைச் சித்தர் போன்ற பலரது கவிதைகள் உண்டு. அதிகம் பிரபலமடையாதவர்களின் பாடல்களும் உண்டு. இயற்றியவர் யார் என்பதே தெரியாமலிருக்கும் சித்தர் பாட்ல்களும் இருக்கின்றன.

இவற்றுள் பலவற்றில் ஒரு விசேஷம் என்னவெனில் எளிய தமிழ் என்று சொல்கிறோமே, அப்படிப்பட்ட பழகு தமிழில் வார்த்தைகள் அமைந்திருக்கும். ஆனால் அந்த வார்த்தைகளின் சேர்க்கையால் உருவான கவிதையின் பொருள் என்ன என்பது விளங்கவே செய்யாது! ஏதோ புதிர் போட்டது போல் இருக்கும். உண்மையில் புதிர் அல்ல அவை. வாழ்க்கைப் புதிரை விடுவிக்க வந்த உயர்ந்த தத்துவங்கள்.

உதாரணத்துக்கு ஒருபாடலைப்பார்க்கலாம்:

மாங்காய்ப் பாலுண்டு
  மலைமேலிருப் பார்க்குத்
தேங்காய்ப்பால் ஏதுக்கடி — குதம்பாய்
  தேங்காய்ப்பால் ஏதுக்கடி.

வார்த்தைகள் இலகுவானவைதாம். பாடலைக் கச்சேரிகளில் கூட வித்வான் பாடக் கேட்டிருக்கிறோம். ஆனால் அர்த்தம் புரிகிறதா?

சோமு விளக்குகிறார்:

"ஐம்புலன்கள் ஞான ஒருமையிலே சேர்ந்து சுரக்கின்ற ஞானப்பாலை 'மாங்காய்ப் பால்' என்பது ஒரு சித்தர் மரபு ஆகும். இந்த உடம்பிலுள்ள அறிவுக்கு ஆதாரமான சுரப்பிகளை வகைப்படுத்திக் கூறியுள்ள சித்தர்கள், இவற்றின் வடிவத்தையும் வர்ணித்துக்கூறியுள்ளனர். ஆன்ம ஆனந்த அனுபவத்திலே, ஆனந்தமாகிய ஞானப்பாலைச் சுரக்கின்ற சுரப்பியின் வடிவம் மாவடுவைப் போன்றது. உடலுறுப்புக்களை ஆராய்ந்து கூறுகின்ற தத்துவ விஞ்ஞானிகளும் இன்றைய அறிவியல் முறையிலே ஆராய்ந்து





''அந்தக் காலத்திலேயே பெண்களின் உரிமைக்காக நாலு பேர் போராடியிருக் காங்க!''

''யாருடா அந்த நாலு பேர்?''

''ராஜா! ராம்! மோகன்! ராய்!''

— உ. ராஜாஜி.

---

கண்டு, மாங்காயின் வடிவத்தில் உள்ள சுரப் பிகளைப் பற்றி எடுத்துக் கூறியிருக்கிறார் கள். சித்தர்களுடைய யோகப் பயிற்சியி னால் ஐம்புலனடக்கம் கைவந்த ஒரு ஞானிக்கு மலைமுகடாகிய தலை உச்சியிலே மாங்காய் வடிவத்திலுள்ள சுரப்பியிலிருந்து (gland) ஞானப்பால் சுரக்கிறது. பசியையும் வேட் கையையும் மீறிய பேருணவாக இந்த ஞானப் பால் உடலுக்குள்ளேயே சொரிய ஆரம் பித்து விடுகிறது. பிறகு ஆடம்பரமான உண வாகிய தேங்காய்ப்பால் வேண்டுவதில்லை. ஞானப்பால் உண்டு மலைமுகடாகிய தலை உச்சியிலே சிந்தனை கூடி நிலைத்து நிற்கும் ஞானிகளுக்கு உலக இச்சையாகிய பிற இன்பங்கள் வேண்டுவதில்லை என்பதை நாட்டுப்புறத்து மக்களின் மொழியிலே கூறுகிறது இந்த எளிய பாடல்.''

'அடேயப்பா! குதம்பைச் சித்தரின் இந்த நாலு வரிக்குள்ளே இத்தனை விஷயம் இருக் கிறதா? அறிவியல் விஷயமான ஞானநிலை, யோகநிலை, பக்திநிலை, துறவுநிலை முதலிய பல அம்சங்களை அல்லவா உள் ளடக்கியிருக்கிறது பாடல்' என்று நாம் வியந்து போகிறோம்.

எளிய சொற்களால் அமைந்த பாடலுக் குள் ஆழமான கருத்துக்களைச் சித்தர்கள் புதைத்து வைத்துள்ளதை சோமு பின்வரு மாறு உவமை கூறி வர்ணிக்கிறார்:

''ஆழமான சுனையில் தூய தண்ணீர் நிரம்பியிருக்கும் போது அடிமணலே கூட கண்ணுக்குத் தெரியும். அது படிகம் போன்ற தண்ணீரின் இயல்பினால் ஏற்படுகிற கண் ணாடித் தன்மை. அடிமணல் தெரிகிறதே என்று நினைத்து அந்தச் சுனைக்குள்ளே இறங்கிவிட முடியுமா? உள்ளே, உள்ளே ஆழ்த்திக் கொண்டே சென்றுவிடும் சுனை யின் ஆழம்! முக்குளி பாய்ந்து அடிமணலை எடுப்பதற்குள் மூச்சுத் திணறக்கூடும்! மூச் சைப் பிடிக்கும் பயிற்சி உள்ளவர்கள்தான் சித்தர் இலக்கியத்தின் அடிமணலைக் கையிலே கொண்டு வெளியே வர முடியும்.'

இப்படி ஒன்றா இரண்டா, ஆயிரக் கணக்கான சித்தர் பாடல்கள் உள்ளன. அவை தமிழ் இலக்கியத்துக்குப் பெருமை சேர்த்திருப்பது ஒருபுறமிருக்க, உலகளாவிய முறையில் தத்துவ ஞானத்தை வளப்படுத்தி யும் உள்ளன. அவற்றையெல்லாம் மீ. ப. சோமு, சித்தர் இலக்கியம் என்ற தமது நூலின் மூன்று பாகங்களில் வடித்துத் தரு கிறார்.

சித்தர்களை அவர் இதோடு விட்டு விடவும் இல்லை! அவர்களுடைய பற்றற்ற வாழ்க்கையை ஆராய்கிறார். சித்தர் பாடல் களில் அறிவியலுக்கு ஒத்தான ஞான ரகசியங்கள் இருப்பதைச் சுட்டிக் காட்டு கிறார். சித்தர்களின் மனிதாபிமானத்தைப் போற்றுகிறார். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற அவர்களது சமய நோக்கைத் தெளிவுபடுத்துகிறார். அவர்கள், சமாதி ஞானத்துடன் யோக முறைகளை அப்பிய சித்துப் பரமானந்த நிலை எய்தியதை விளக்கு கிறார். அவர்கள் வழிபட்ட நெறிகள், அவர்கள் பெற்றிருந்த உள்ளொளி இவற்றை நமக்கு உணர்த்துகிறார். இவ்வள வுக்கும் ஊடே அவர்களுடைய இலக்கிய ஆர்வமும் கவிதை நயமும் எப்படி பிரகா சித்தன என்பதையும் காட்டுகிறார்.

ஞானிகள் வரைந்த விளக்கப் படங்கள், எந்திரங்கள்; சக்கரங்கள் முதலியன நூலின் இணைப்புப் பகுதியில் தரப்பட்டுள்ளன.

இவற்றையெல்லாம் மூன்று பகுதி களாக — மூன்று நூல்களாக — உருவாக்கித் தர சோமுவுக்கு மூன்று ஆண்டுகள் ஆகி யுள்ளன. இந்தப் பணிக்கு அவருக்குத் துணை நின்று ஊக்குவித்தவர் ராஜா சர் முத்தையா செட்டியார். அவர் காலமான பிறகு அவரது மகன் எம்.ஏ.எம். ராமசாமி அதே அளவு ஆர்வம் காட்டி அண்ணா மலை பல்கலைக் கழகம் மூலம் சோமுவுக்கு நிதி வசதி செய்தளித்து உற்சாகப்படுத்தி வந்திருக்கிறார்.

மேலும் மூன்று ஆண்டுகள் அவகாசம் தந்து, சித்தர் பாடல்கள் அனைத்தையும் (Complete works) பொழிப்புரை, ஆய்வுரை, விளக்கவுரையுடன் மூன்று பாகங்களாக வெளியிடும் பெரும் பொறுப்பையும் அண்ணாமலை பல்கலைக் கழகம் சோமு விடமே ஒப்படைத்திருக்கிறது.

இந்த அரிய பெரிய பணிக்காக மீ. ப. சோமுவுக்கு டாக்டர் பட்டம் வழங்கப் படுமோ என்னமோ, நமக்குத் தெரியாது. ஆனால் ஒன்று நிச்சயம் — சோமுவின் இந்த நூல்களை ஆராய்ந்து, ஆய்வுரைகள் சமர்ப்பித்துப் பலப்பலர் எதிர் காலத்தில் டாக்டர் பட்டம் வாங்கி விடப் போகிறார் கள்!

— ஓ. ராஜேந்திரன்.

***சித்தர் இலக்கியம் (மூன்று பாகங்கள்) ஆசிரியர்: மீ. ப. சோமு, வெளியீடு: அண்ணா மலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர், — 608 002. விலை: ஒவ்வொரு பாக மும் ரூ. 60/-***



சண்டைக் காட்சி என்றால் டிஷ்யூம் டிஷ்யூம்தானா...?

இந்தப் பக்கத்தில் இடம் பெற்றுள்ள 'சண்டை'க் காட்சிகள் எந்தெந்த சினிமாவில் வருபவை என்று ஒரு தபால் கார்டில் எழுதியனுப்புங்கள். 5/5 வாங்குபவர்களுக்கு ரு. 25 பரிசு. ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் 5/5 வாங்கினால் இருக்கவே இருக்கிறது, குலுக்கல்!

முடிவு தேதி: 15.6.89.

1



2



3



# சண்டைக் காட்சிகள் குவிஸ்!

4

5





# ரகசியம்

அந்த அலுவலகம் மதிய உணவு இடைவேளை கருதி ஓய்வெடுத்துக் கொண்டு இருந்தது.

சாப்பாடு முடித்தவர்கள் பேச்சிலும், சிலர் மாத நாவலிலும், மற்றவர்கள் உறக்கத்திலும் மூழ்கியிருந்தனர்.

''மாலதி, வாங்களேன் கேன்டீன் போவோம்'' என அழைத்தான் நவீன்.

''ஒரு நிமிஷம் நவீன்,'' என்ற மாலதி, படித்த புத்தகத்தை மூடி. மேசை இழுப்பறையைத் திறந்து உள்ளே வைத்தாள். நாற்காலியை நகர்த்தி எழுந்தாள்.

காற்று நுழைந்த வாசல் வழியே வெளியேறினர்.

அலுவலகத்தில் இருவருக்கும் பக்கத்துப் பக்கத்து இருக்கைகள். அதனால், நெருங்கிப் பழகி நண்பர்கள் ஆயினர்.

கேன்டீனும் உண்ட மயக்கத்தில்.

''கூல் ஆர் ஹாட்?'' கேட்டவன் நவீன்.

''கவிதை.''

''வாட்?''

''எஸ். உங்க கவிதை. ஒண்ணு சொல்லுங்களேன், கேட்போம்?'' ஆர்வமாக நுனி இருக்கையில் அமர்ந்து, கையூன்றி, கன்னம் வைத்தாள் மாலதி.

''அதுக்கா கேன்டீன் வந்தோம்?'' என்றவன், என்றாலும் அவள் விருப்பத்தை நிறைவேற்றினான்.

''அற்புதம்,'' என வியந்தாள் மாலதி. ''வாழ்க்கை நிஜங்களை வரிகளாக்குகிற உங்கள் யுக்திக்கு இணையில்லை நவீன்.''

''புகழறீங்க.''

''இல்லே. பூரிக்கிறேன். நான் உங்களால் கவரப்படக் காரணமே உங்கள் சுதந்திரமான சிந்தனைகள்தான் நவீன். உங்களோட



## ராஜா பாலசந்தர்

ரசனைகள்' எனக்குள்ளும் பொங்கியிருக்கு, தெரியுமா?'' சிறுபிள்ளையின் ஆர்வத்தோடு பேசினாள் மாலதி.

''உண்மைதான் மாலதி. நம் நட்பின் அடித்தளமே நம்மிடையே இழையோடி இருக்கிற ஒரு கலாரசனைதானே?... ரசனையற்றவன் மனிதனாய்ப் பிறந்ததே வீண். ஏன், அவன் மனுஷனே இல்லையம்பேன்.''

அவன் கூறிய கருத்தில் தனக்கு உடன்பாடு இல்லையென்றாலும், நட்பு கருதி முறுவலித்தாள் மாலதி.

உயர்ந்த சிந்தனைகள் பொழியும் நவீன், இப்படித்தான் சில சமயங்களில் மனத்தை உறுத்திவிடுவான். அவனது அதீத உணர்ச்சியின் வெளிப்பாடே அது என்பது மாலதிக்குத் தெரியும்.

அவனை மனதார மன்னிப்பாள் அவள்.

அவனால்தான் சன்னலுக்கு வெளியே நடனமிடும் சுதந்திரத்தைப் பாட

''உங்க கணவர்
உங்களுக்குத்
தகுதியில்லாதவர்
மாலதி...! இது
பொருந்தாத ஜோடி''



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1989

**முதல் பரிசு ரூ. 1500; இரண்டாவது பரிசு ரூ. 750; மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 விதம்) ரூ. 750.**

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.**

**போட்டி பற்றிய முழு விவரங்களை அறியச் சென்ற இதழ்க் கல்கியைப் பாருங்கள், அல்லது அடுத்த இதழ்க் கல்கிக்காகக் காத்திருங்கள்.**

— ஆசிரியர்

முடியும். குப்பத்து வாழ்க்கையையும் கலைக் கண்ணோடு பார்க்க முடியும். மழைத் தூறலுக்காக ஒதுங்கி விடாமல், அதன் சிலிர்ப்பை, அனுபவிக்க முடியும். இவையெல்லாம் கருதி அவன் நிவ்ரத்தை ஏற்றுக் கொண்டாள் மாலதி.

அதனால்தான், அந்த அலுவலகத்தில் பல ஆண்கள் பணிபுரிந்தாலும், மாலதிக்கு விருப்பமானவனாக இருந்தான் நவீன்.

குடிக்க, குளிர்பானம் தருவிக்கப்பட்டது. சில்லென்ற கண்ணாடி டம்ளரை, தன் இதழ் விளிம்பில் பொருத்தி, ஓசை எழுப்பாமல் உறிஞ்சினாள் மாலதி.

மணி பார்த்தான் நவீன், ''ஆயிடுச்சு. வீட்டுக்குப் போகலாமா?''

''அதுக்கு முன்னால ஒரு ரிக்வெஸ்ட்'' சிரித்தாள் மாலதி.

''என்ன?''

''நாளைக்கு நாம ஃப்ரீதானே? என் வீட்டுக்கு வாங்களேன்? என் கணவரையும் பார்த்த மாதிரி இருக்கும்.''

''ஷ்யூர்.''

**போ**ர்ட்கோ பிடித்து நின்ற போகன் வில்லாக்கள் கையசைத்து வரவேற்றன.

முன்புறத் தோட்டத்தில் பல்வண்ணச் செடிகள். அவற்றின் அணிவகுப்பே மாலதியின் கலையார்வத்திற்கு இன்னுமொரு சான்று.

''யாருப்பா நீ? என்ன வேணும்?'' — முற்றத்தில் சிகரெட் பிடித்துக் கொண்டு இருந்த மனிதர், வந்தவனை அலட்சியமாகப் பார்த்தார்.

அவரின் தோற்றத்திலிருந்து, தன்னைவிட ஒரு சில வயது அவர் பெரியவராக இருக்க வேண்டும் என்பதை யூகித்தான் நவீன். அப்படியிருக்கையில், அவர் தன்னை ஒருமையில் விளித்தது, நவீனின் கோபத்தைக் கிளறியது. அடக்கினான்.

''மிஸஸ் மாலதி வீடு இதுதானே?'' என்று கேட்டவனின் மனத்தில் யார் இந்த நாகரிகம் தெரியாத ஆள்? என்ற கேள்வி எழுந்தது.

''ஆமா. நீ யாருன்னு முதல்ல சொல்லுப்பா.''

''நா அவங்களோட வேலை செய்யறவன். அவங்களைப் பார்க்க வந்தேன்.''

''அப்படியா? இரு அவளைக் கூப்பிடறேன்,'' என எழுந்தவரை, நிற்க வைத்தது நவீனின் கேள்வி.

''நீங்க யாரு சார்? மாலதிக்கு என்ன வேண்டும்?''

''புருஷன்.''

'வாட்!' என நம்ப முடியாமல் திகைத்தான் நவீன்.

மாலதியின் அழகு, நாசூக்கு, நாகரிகம் என எதற்குமே பொருந்தாத இவனா மாலதியின் கணவன்?

''வாங்க நவீன், உங்களை எதிர்பார்த்துக் கொண்டுதான் இருந்தேன். ஏங்க, இவர்தான் நவீன். சொல்லியிருக்கேனில்ல?'' என உரக்கக் குரல் கொடுத்தாள் மாலதி.

''ம்... ம்...'' என பதில் குரல் அசட்டையாக வந்தது.

''அப்புறம் என்ன சாப்பிடறீங்க?'' எனக் கனிவாகக் கேட்டாள் மாலதி. ''நீங்க வந்தது எனக்கு ரொம்ப சந்தோஷம் நவீன். உங்க கவிதை நோட்டு எடுத்து வரச் சொன்னேனே?''

''ஓ, இந்தாங்க.''

''படிச்சுட்டு அப்புறமா எடுத்து வரேன்?''

''ஓ எஸ்.''

சற்று நேரத்தில் வெளியே வந்தான் மாலதியின் கணவன். உடை மாற்றியிருந்தான்.

''ஏங்க, இவர் சாதாரண ஆள் இல்லைங்க.''

''அதான் சொன்னியே. ஏம்பா, நீ கவிதை கிவிதையெல்லாம் கிறுக்குவியாமே? நமக்கு அதிலெல்லாம் இன்ட்ரஸ்ட் கிடையாது. என்னைக் கேட்டா, இதெல்லாம் வேஸ்ட் ஆஃப் டைம்.''

சுருக்கென மனத்தில் கோபம் தைக்க உஷ்ணமானான் நவீன். மாலதி சிரித்தபடி இருந்தது அவனை ஆச்சரியப்பட வைத்தது.

''சரிடி, நா போயிட்டு வர்றேன்,'' என்ற மாலதியின் கணவன், நவீனை ஒரு பொருட்டாகவே எண்ணாதவன் போல வெளியேறினான்.

''ஸாரி நவீன். அவர் இப்படித்தான் மனத்தில் உள்ளதை வெளிப்படையாச் சொல்லிடுவார்... நீங்க தப்பா எடுத்துக்காதீங்க,'' எனப் புன்னகை மாறாமல் சொன்னாள் மாலதி.

''பரவாயில்லைங்க. இருந்தாலும் என்

மனசுக்குள்ள வேற ஒரு வேதனை.''

''என்ன?''

''உங்க கணவர் உங்களுக்குத் தகுதியில்லாதவர் மாலதி. இது பொருந்தாத ஜோடி. எப்பவும் சிரிச்ச முகமா இருக்கற உங்களுக்குச் சிடுசிடுப்பான மனிதர் கணவனா அமைஞ்சிருக்கறதை என்னால தாங்கிக்க முடியலை. வேதனையாயிருக்கு.''

''என்ன, மனசுல இருந்ததையெல்லாம் கொட்டியாச்சா, இன்னும் வேற ஏதாகிலும் இருக்கா?'' என்று கேட்டு விட்டு, கலகலவெனச் சிரித்தாள் மாலதி.

''நோ... நோ... உங்க சிரிப்பு பொய். மகிழ்ச்சி பொய்,'' என்றவன் நிறுத்தினான். ''எப்டி உங்களால வேதனைகளை மனசுல மறைச்சு, சந்தோஷத்தை காட்ட முடியுது மாலதி?''

''இல்லையே! நிஜமாலுமே நான் வாழ்க்கையில் மகிழ்ச்சியாத்தான் இருக்கேன் நவீன்.''

''ஹூ?'' — அவநம்பிக்கையுடன் சிரித்தான்.

''ஏன், நம்ப முடியலையா? பரவாயில்லைங்க. இருந்தாலும் நான் வாழ்க்கையில சந்தோஷமாத்தான் இருக்கேன். என் கணவர் சில சமயங்கள்ள நடந்துக்கற முறை எனக்குப் பிடிக்காம இருக்கலாம். ஆனால் அவர் நான் நினைக்கிற மாதிரிதான் இருக்கணும்னு எதிர்பார்க்கறது எவ்வளவு முட்டாள்தனம்...''

''பட் மாலதி! உங்க கணவர் ரசனையே இல்லாதவர்!''

''அப்சலியூட்லி கரெக்ட். ஆனா, அதை ஒரு குறையா நான் நினைக்கிறதில்லை. அது அவர் சுபாவம். அவருக்கு இயற்கையை ரசிக்கத் தெரியாதுதான். கவிதை எழுத வராதுதான். உலகத்துல இருக்கற எல்லாருமே கவிஞர்களா மாறிட்டா, அவங்க எழுத்துக்களுக்கு ரசிகர்களே இல்லாத நிலை வந்திடுமே?''

''இருந்தாலும், உங்க உணர்வுகளை அன்னியோன்யமா பகிர்ந்துக்க அவரால முடியாதே?''

''அவரோட பல உணர்வுகளை என்னால் புரிஞ்சுக்கக் கூட இயலாத நிலை இருக்கு தெரியுமா நவீன்? அதுக்காக அவர் என்னை வெறுக்க நினைச்சா என் கதி என்னாகிறது?'' கேட்டு விட்டு, சோபாவில் சாய்ந்து, ஃபேனைப் பார்த்தாள் மாலதி.

யோசனையில் ஆழ்ந்தான் நவீன்.

சின்ன இடைவெளி விட்டு, தானே பேசினாள் மாலதி. ''பன்னிரண்டு மணி நேரம் இருள் கவிழ்ந்திருக்கிறதால, மனிதர்கள் இருட்டில் வாழும் இனம்னு சொல்லிட முடியாதே? அது போல, சில விஷயங்கள்ள எங்களுக்குள்ள பொருத்தமின்மை இருந்தாலும் நாங்க ஒற்றுமையாத்தான் வாழறோம். எங்க வாழ்க்கையின் வெற்றி ரகசியம் என்ன தெரியுமா?''

''சொல்லுங்களேன்,'' என ஆர்வமாக முன்வந்தான் நவீன்.

''ஒரு கணவனின் எல்லாத் தேவைகளையும் மனைவிதான் பூர்த்தி செய்யணும்கிறதிலோ, அல்லது மனைவியின் தேவைகள் எல்லாத்தையும் கணவன்தான் நிறைவேற்றி வைக்கணும்கிறதிலோ எங்களுக்கு உடன்பாடில்லை. அது நம்ம கலாசாரத்துல ஊறிப்போய் இருக்கிற குறுகிய கண்ணோட்டம்கிறதுல சந்தேகமே இல்லை. என்னால பூர்த்தி செய்ய இயலாத அவரின் தேவைகளை, மற்றவர்கள் மூலமா அவர் நிறைவேற்றிக்க நான் சம்மதிக்கிறேன். அதே போல, தன்னால் பகிர்ந்துக்க முடியாத சில உணர்வுகளை, மற்றவர்கள் மூலமா பெற்றுக்க என்னை அவர் அனுமதிக்கிறார். உதாரணத்துக்குச் சொல்லணும்னா, என் இலக்கிய ஈடுபாட்டுக்கு வடிகால் நீங்கதானே? உங்களோட நான் பல இலக்கியக் கூட்டங்களுக்கு வந்திருக்கேன். இலக்கியம் பற்றி நிறைய விவாதிக்கிறேன். மனமொத்த நண்பர் என்ற முறையில் உங்களை என் வீட்டுக்கே அழைக்கிறேன். இதை எல்லாம் என் கணவர் பரிபூரண மனசோட ஆதரிக்கிறார். அதுபோலத்தான், அவரோட உரிமைகள்ள, உணர்வுகள்ள என் குறுக்கீடு இல்லாம நான் எச்சரிக்கையா இருக்கேன். எங்களுக்குள்ள நல்ல புரிந்து கொள்ளுதல் இருக்கு. ஸோ, இதுவரைக்கும் மிஸ்அண்டர்ஸ்டேண்டிங் ஏற்பட்டதில்லை. ஏற்படாது. இந்தச் சூழ்நிலையில் நான் மகிழ்ச்சியாத்தானே இருக்க முடியும்?''

''புரியுது,'' என்று மட்டும் கூறினான் நவீன்.

''டைம் ஆச்சு. வாங்க சாப்பிடலாம்.''

''இன்னொரு நாளைக்கு வர்றேனே?'' என எழுந்தான் நவீன்.

மாலதியிடம் விடைபெற்றுத் தன் அறை வந்த போதுதான், அவள் கணவனுக்குத் தன் வணக்கத்தைக் கூறாமல் வந்து விட்டது அவன் மூளைக்குள் தெறித்தது.

---

அடுத்த இதழில்......

**தமிழ் மீடியமா? ஆங்கில மீடியமா?**

— ஒரு காரசாரமான விவாதம்.








ОО சூரிய சக்தியை மின் சக்தியாக மாற்றுவது சாத்தியமே என்பது பல காலமாக நிரூபிக்கப் பட்டிருந்த போதிலும் நீர் மற்றும் அனல் மின் நிலையங்களை விட உற்பத்திச் செலவு மிகவும் அதிகமாகிறது. இதனைக் குறைக்கவே இப்போது தீவிர ஆய்வுகள் நடக்கின்றன, அமெரிக்காவில். தன்னைத் தாக்கும் சூரிய ஒளியில் 31 சதவீ தத்தை மின் சக்தியாக மாற்றும் சோலார் செல்களை உள்ளடக்கிய வீட்டுக் கூரை இப்போது உருவாகியுள்ளது. இதில் உற்பத்திச் செலவு ஐம்பது சதவீதம் குறைக்கப் பட்டுள்ளது. ஆனபோதிலும் கூட இது அனல் மின் நிலையத்தின் உற்பத்திச் செலவை விட நாறு சதவீதம் அதிகமாக உள்ளது! ஆய்வுகள் தொடர்கின்றன.

ОО இன்று நீங்கள் ஒரு பத்திரிகையைப் புரட்டினால், "லக்ஸ் டாய்லெட் சோப்பை உபயோகியுங்கள்" என்று விளம்பரத்தில் சினிமா நட்சத்திரம் கூறுவதாகப் படிக்கிறீர்கள். எதிர்காலத்தில் சஞ்சிகையின் பக்கத்தைப் புரட்டியதும் அந்தப் பக்கத்தில் காணப்படும் விளம்பரத்தில் உள்ள நபர் உங்களுடன் பேசுவார்! ஒலிப்பதிவான பேச்சு அல்லது பாட்டு வரிகள் பத்திரிகையின் பக்கத்தைப் புரட்டும் போது இயக்குவிக்கப் படுகிறது. இப்படி ஒரு நூதன சாதனை உருவாகியுள்ளது அமெரிக்காவில். பரிசோதனைக் கட்டத்தில் உள்ள இது சீக்கிரமே பிரபலமாகும் என்று நம்புகிறார்கள்!

— நியூஸ் வீக்

ОО நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சியின் தலைவராக ராஜீவ் தேர்ந்தெடுக்கப்பட்டதும் இதை விடப் பெரிய பூமாலை இருக்க முடியாது என்ற அளவில் ஒரு மாலையைத் தேடிப் பிடித்துச் சென்னையிலிருந்து விமானத்தில் டில்லிக்குக் கொண்டு வரச் செய்து போட்டவர் மூப்பனார். ஆனால் மூப்பனாரின் மகிழ்ச்சியில் ஒரு சிறு பங்கைக் கூட அந்த மாலை பிரதிபலிக்க வில்லை. அத்தனை சந்தோஷம் அவருக்கு. இந்திரா காந்தி மரணத்துக்கும் ராஜீவ் தேர்தலில் வென்று பதவியில் அமர்வதற்கும் இடையில் உள்ள காலகட்டத்தில் மூப்பனார் உயிரைக் கொடுத்து வேலை செய்திருந்தார். இந்திராவின் மரணத்துக்குப் பிறகு மூப்பனார் தமது விசுவாசத்தை அப்படியே தாயிடமிருந்து தனயனுக்கு மாற்றினார். ராஜீவும் இவரை சின்னக் காமராஜ் என்றார். ஆனால் அரசியலின் போக்கை என்னென்பது. அற்புதமான அந்த மாலையும் வாடித் துவண்டது போல் காங்கிரஸில் இன்று கேட்பாரற்றுக் கிடக்கிறார் மூப்பனார்!





ОО ரவி சாஸ்திரி காதல் வயப்பட்டிருக்கிறார். கிரிக்கெட் வீரரின் உள்ளத்தைக் கவர்ந்த பெண் அர்ஜென்டைனா தேசத்தைச் சேர்ந்த டென்னிஸ் வீராங்கனை கேப்ரியெலா ஸபாடினி. கேப்ரியெலா முதன் முதலில் ரவி சாஸ்திரியைச் சந்தித்தது விம்பிள்டன் மைதானத்தில் — இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு. இப்போது மேற்கிந்தியத் தீவுகளுடன் விளையாட இந்திய அணி சென்ற போது இடையில் நியூயார்க்கில் சாஸ்திரி தமது காதலியைச் சந்திக்க, நிச்சயதார்த்தம் நடந்து விட்டதாம்!

ОО ஆர்.எஸ்.எஸ். இயக்கத் தலைவர் ஹெட்கேவார் நூற்றாண்டு இது. அவர் உருவம் பொறித்த தபால் தலை வெளியிட வேண்டும் என்று ஆர்.எஸ்.எஸ். முயன்றது. மத்திய அரசு ஒப்புதல் அளிக்கவில்லை. உடனே ஆர்.எஸ்.எஸ். ஒரு கோடி இன்லாண்ட் கடிதங்களை அச்சடித்தது. இவற்றில் ஹெட்கேவாரின் படம் இடம் பெற்றது. இவற்றை இலவசமாக விநியோகித்தது. யாரும் இதில் கடிதம் எழுதி 35 பைசா ஸ்டாம்ப் ஒட்டி போஸ்ட் பண்ணி விடலாம். தபால் ஆபிஸில் இன்லாண்டு கேட்டால் ஸ்டேஷனரி சார்ஜ் உண்டு. இதுவோ இலவசம். பிறகென்ன? அரசுக்குப் பல லட்சம் நஷ்டம். ஹெட்கேவாரும் தபால் மூலமாகப் பவனி வருகிறார்!

— விக்கி.

—— சுத்தரிக்கோல்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

பால் தேவைப்படும் போதெல்லாம், அமூல்யா இன்ஸ்டன்ட் மில்க்மிக்ஸ் கொண்டு தயார் செய்யுங்கள். வெதுவெதுப்பான நீரில் கலந்து, உங்களின் டீ அல்லது காப்பிக்கு உபயோகியுங்கள். அல்லது பாலாகவும் உபயோகிக்கலாம். இதன் ருசி உங்களுக்கு மிகவும் பிடிக்கும். காரணம் இதனை அளிப்பது அமூல். இதில் அமூல் கொண்டுள்ள சுவையும் தூய்மையும் உண்டு.




# Amulya

## Instant Milkmix

**பால்-எப்போது தேவையோ அப்போது !**






விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப். மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லிட்.,
ஆனந்த்-388 001.

ULKA-3-88-TA

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# இரண்டில் ஒன்றை தேர்ந்தெடுங்கள் இன்றே!




இதோ எங்கள் இரண்டு வித CAT 1000 மாடல்கள். இவை கம்ப்யூட்டர் எய்டெட் டெக்னலஜியின் அருமையான படைப்புகள். டிவியை ஸ்விட்ச்-ஆன் செய்ததும் அவற்றின் சிறப்புகளைக் கண்டுகளிக்கலாம். பிரகாசமான, துல்லியமான, உயிரோவியமான வண்ணங்கள் தோன்றும். இவை அனைத்தும் கம்ப்யூட்டர் எய்டெட் டிசைனிலும் (CAD), உலகத்தரம் வாய்ந்த தயாரிப்பாளர்களின் LOT, SMPS, MOSFET, எலெக்ட்ரானிக் ட்யூனர், கலர் ஐஸி-க்கள் போன்ற இம்மியளவும் குறைகளற்ற உறுப்புகள் கொண்ட கம்ப்யூட்டர் எய்டெட் மான்யுஃபாக்சரிங்கிலும் (CAM) மட்டுமே சாத்தியமாகி இருக்கின்றன.

## ◀ CAT 1000 SE

பளபளப்பாக பிரமிப்பூட்டும் பேரழகு கொண்ட கலர் டிவி




## CAT 1000 DX ▶

(ரிமோட் மாடல்)

டிஜிட்டல் ஸிந்தஸைஸர் ட்யூனிங் மற்றும் 39 ப்ரோகிராம் மெமரி கொண்டது.

CAT 1000 DX டிவியின் ரிமோட் ஹாண்ட் செட்டில் (தொலைக் கட்டுப்பாட்டில்) மைக்ரோப்ராஸஸர் கண்ட்ரோல் அமைக்கப்பட்டுள்ளது. இதனால் ப்ரோகிராம், பாண்டு மற்றும் சானல் செலக்ஷன், தவிர வால்யூம், கலர் காண்ட்ராஸ்ட், ப்ரைட்னஸ், மியூட், ஸ்டாண்ட்-பை போன்ற இயக்கங்களை மிக எளிதில் செய்ய முடிகிறது.

Solidaire
10



படங்களின் அன்பாதரவு: கீதாஞ்சலி அம்பர் மற்றும் சுஜாதா பிலிம்ஸ் லிமிடெட் ('அக்னி நட்சத்திரம்' படக்காட்சி)

கலர் சாலிடேர்

Insight-DE-820